21-4

# விவேக சிந்தாமணி

(மூலமும் உரையும்)



உரையாசிரியர்
தேவார உரைமாமணி
வ.த. இராமசுப்பிரமணியம், எம்.ஏ.

வர்த்தமானன் பதிப்பகம்
141, உஸ்மான் சாலை,
ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,
தி. நகர், சென்னை – 600 017
தொலைபேசி : 8257995

21-4

KOVILOOR VEDANTA MUTT

# முன்னுரை

உலகியலில் அவ்வப்போது ஆங்காங்கு நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கவிதைகள் வாயிலாக இனிமை நயம் தோன்றப் புலவர் பெருமக்களால் பாடப் பெற்றவை விவேக சிந்தாமணி. இப்பாடலாசிரியர்கள் யாவர் எனக் குறிப்பாகச் சொல்வதற்கு அரிது. ஆயினும் தமிழின் மேன்மை யறிந்து போற்றும் தமிழ்ச் சமுதாயம் இந்நூலை நன்கு ஏத்திப் போற்றி வருவது கண்கூடு. இதில் உள்ள பாடல்கள் யாவும் பொருட்செறிவு மிக்கவை. சொற்சிலம்பம் கொண்டவை.

இந்நூல் பல்வகையாராலும் போற்றப் படுவதற்குப் பாக்களின் செம்மையே முதற்காரணம் எனலாம். இவை நன்கு வகைப்படுத்தி, உரிய தலைப்புக்களைக் கொடுத்துத் தகுந்த விளக்கங்களையும் கற்பனை எழில் விளங்கப் படைத்து, இங்கு வெளியிடப்படுகிறது. தமிழ் மக்கள் இதில் வரும் பாடல்கள் பலவற்றை நன்கு அறிந்திருப்பர். இவற்றுள் சில பழமொழித் தொடர்களாகவும் சில நீதித் தொடர்களாகவும் வழங்கி வருவதைக் காணலாம்.

துன்பத்தின் தொடரை நன்கு விளக்கும் தன்மையில் ஒருவன் படுகின்ற இன்னல்களை "ஆவீன மழை பொழிய" (பாட்டு எண் 46) என்னும்

செய்யுளால் காட்டப்பெறுதலைக் காணலாம். மற்றும் நாடு நன்மழை கண்டு சிறப்பும் செழுமையும் கொள்ள வேண்டும் என்னும் வகையில் மூன்று செயல்களை ஏத்தியுரைத்து அதன்வழி நாட்டு நலனைக் காக்கும் திறனை நோக்கி மகிழத் தக்கதாகும். இக்கருத்து எளிய பாடல் ஒன்றால்,

**"வேதம் ஓதிய வேதியர்க் கோர்மழை**
**நீதிமன்னர் நெறியினுக் கோர்மழை**
**மாதர்கற்புடை மங்கையர்க் கோர்மழை**
**மாதமூன்று மழையெனப் பெய்யுமே."**

**(பாடல் எண் 32)**

எனப் பகர்வதாயிற்று.

தமிழன்பர்கள் சுவைப்பதற்காகவே அமைக்கப் பட்டவை. இந்நூலின் பாடல்கள் எனல் மிகையாகாது.

இதில் வரும் காதற்சுவை மிகுந்த பாடல்கள் தலைவன் தலைவியின் மெய்யன்பை வெளிப்படுத்தல், தலைவியைப் புகழ்தல் மனைவியின் கடமையைக் கூறுதல், ஆடவர்களின் பண்பற்ற மோகம், நிலையின் திரிந்த மகளிர் நிலை, கற்புடைய மாதரின் செம்மை முதலான கருத்துக்களைச் சுவைபடக் கூறுவனவாகும். பாடல்கள் பல மிக எளிமையான சொற்களால் பாடப்பட்டவை. பாடற் குறிப்பில் உரைக்கப்படும் கருத்தும் பொருளாகக் கொள்ளும் வகையிலும் இவண் தரப்பட்டுள்ளது.

விவேகமாக வாழ்க்கையில் நடந்து செயல் படுவது பற்றி இந்நூல் நன்கு விளக்கும் என்பது மிகையாகாது.

அரிய நூல்களைத் தமிழுலகத்திற்கு அளித்துப் பெருஞ்சாதனை புரிந்துவரும் வர்த்தமானன் பதிப்பகத்தினர் இந்நூலை அச்சிட்டு நன்கு வெளியிட்டுள்ளனர். இவர்களுக்கு எனது நன்றியை மனதாரத் தெரிவித்துக் கொள்கின்றேன். இனிமை மிகும் இந்நூலைப் பயிலும் தமிழ் அன்பர்களும் இனிது மகிழ்ந்து விளங்குவார்கள் என்பது உறுதி.

அன்பன்,
**வ.த. இராமசுப்பிரமணியம்.**

# பொருளடக்கம்

# விவேக சிந்தாமணி

## கடவுள் வணக்கம்

### நேரிசை வெண்பா

**அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற்றிற் பிறந்த**
**தொல்லைபோம் போகாத் துயரம்போம் – நல்ல**
**குணமதிக மாமருணைக் கோபுரத்துள் வீற்றிருக்கும்**
**கணபதியைக் கைதொழுதக்கால்.**

**தெளிவுரை:** *திருவண்ணாமலை என்னும் தலத்தில் நெடிது விளங்குகின்ற கோபுரத்தில் எழுந்தருளி வீற்றிருக்கும் கணபதிக் கடவுளைக் கைதொழுது ஏத்தி வழிபட, நமது துன்பமெல்லாம் அகலும்; வன்மையான வினை நீங்கும்; பிறவித்துயர் போகும்; எத்தன்மை யாலும் விலகாத தன்மையுடையதாய், ஆன்மாவைப் பற்றியுள்ள துன்பப் பிணியும் நீங்கும். இத்தகைய வித்தகம் மிகுந்த அருள்புரிபவர், நற்குணம் என்னும் சத்துவகுணம் மேலோங்கவும், கருணை விளங்கவும் மேவும் விநாயகரே ஆவர்.*

**சிறப்புரை:** *இப்பாடல் விநாயகரை ஏத்தி வழிபடும் காப்பாக அமைந்தது. மனிதனின் துன்பத்திற்கு அவன் செய்யும் வினையே காரணமாக அமையுமாதலால் வல்வினை எனக் கூறப்பட்டது. அறியாமையால் நேரும் துன்பம் அல்லல் எனவும் ஆகும். ஆன்மாவைப் பற்றி இருப்பவை ஆயுள், மனம், இந்திரியங்கள்,*

நினைவாற்றல், ஆசை, வெறுப்பு, பிராணன், அபானன் எனச் சித்தர்கள் உரைப்பார்கள். இவைகளைப் போகாத் துயரம் என இவண் சுட்டுதலாயிற்று. விநாயகக் கடவுள் கருணை வயத்தராகி அருள் புரியும் செம்மை நன்கு ஓதப் பெற்றது.

# நூல்

## I. இறைமை

### 1. இறைவனை வணங்கவேண்டும் எனச் சொல்லுதல்

**பாடற்குறிப்பு:** ஒரு செல்வந்தர் காசே கடவுள் என்று குறியாக இருந்தார். அவர் திருத்தலங்களுக்குச் செல்வ தில்லை. ஈசனையும் வணங்குவதில்லை. தருமம் செய்வதும் இல்லை. அவரிடம் ஒரு புலவர் செல்ல அச் செல்வந்தர் அன்பு ததும்பப் பேசினார். தான் கல்வியின் மேன்மையை அறிந்ததில்லை எனவும், தனக்கு அறம் செய்தலைப் பற்றித் தெரியாது எனவும் கூறினார். புலவர் இச் செல்வந்தருக்குத் தகுந்தபடி அறங்களைச் சொல்லவேண்டும் எனக் கருதி இப்பாடலைக் கூறினார். அச்செல்வரும் அதனைக் கேட்டு அவ்வாறு ஒழுகலானார்.

**அறுசீரடி ஆசிரிய விருத்தம்**

**திருப்பதி மிதியாப் பாதம்**
**சிவனடி வணங்காச் சென்னி**
**இரப்பவர்க்(கு) ஈயாக் கைகள்**
**இனிய சொல் கேளாக் காது**

புரப்பவர் தங்கள் கண்ணீர்
பொழி தரச் சாகாதேகம்
இருப்பினும் பயனென் காட்டில்
எரிப்பினும் இல்லை தானே.

**தெளிவுரை:** இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்கள் தோறும் சென்று மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் சிறப்பினை நன்கு ஓர்ந்து முறையாக வழிபட வேண்டும். சிவபெருமானை வணங்கித் துதிக்க வேண்டும். அவ்வாறு செய்யாதிருந்தால் தலையால் பெறுகின்ற பயனை அடைய முடியாது. யாசிப்பவர் களுக்கு வாரி வழங்குதல் வேண்டும். அன்றெனில் கைகளால் பயனில்லை. செவிக்கு இனியவாறு இன் சொல்லைப் பேச வேண்டும். அன்றெனில் காது இருந்தும் செவிடு போன்றதாகும். அவ்வாறே தன்னுடைய துன்பத்தைப் போக்கிக் காப்பாற்றிய ஒருவர் துன்புற்று வருந்தும்போது தானும் இரக்கம் கொண்டு அவருக்காகத் தியாகம் செய்யவேண்டும். அப்படிச் செய்யவில்லையானால் இவ்வுடலால் எந்தப் பயனும் இல்லை. நன்றியின் வயப்பட்டுப் பிறர்க்கு உதவி புரியாத தேகம் இருந்தாலும் பயனில்லை. சுடுகாட்டில் எரிக்கப்பட்டாலும் பயனில்லை எனப் போன்றதாகும்.

திருப்பதி – சிவபெருமான் விளங்கும் தலங்கள்.

**2. மயில் குயில் அன்னம் முதலானவற்றின் குணப்பாங்குகள் கொண்டவர்கள் தெய்வத் தன்மை யுடையவர்களாகும்.**

**பாடற்குறிப்பு:** இரு நண்பர்கள், ஓரிடத்தில் உரையாடிக் கொண்டிருந்தபோது, ஆங்கு மயில் போன்ற

சாயலுடையவளாக, அன்னம் போன்று நடை நடந்து அவ்விருவரையும் பார்த்துத் தன் குயில் போன்ற இனிய குரலால் வணக்கம் எனக் கைகளைக் கூப்பி மரியாதை செய்தாள். அவ்விரு நண்பர்களும் ஒருவருக்கொருவர் அப் பெண்மணி தனக்கே வணக்கம் செய்தாள் என வாதம் புரிந்தனர். அவர்களுடைய வாதத்தில் பன்றி, பாம்பு என்னும் சொற்களும் உதிர்ந்தன. அவ்வழியே வந்த புலவர் ஒருவர் அவ்விரு நண்பர்களையும் சமாதானப்படுத்தும் முகத்தான் மயில் முதலான பதின்மூன்று பொருள்களும் தெய்வத்தன்மை வாய்ந்ததாகும் எனச் சாற்றினார். அதுவே இப்பாடல்.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**மயில்குயில் செங்கா லன்னம்**
**வண்டுகண் ணாடி பன்றி**
**அயிலெயிற்(று) அரவு திங்கள்**
**ஆதவன் ஆழி கொக்கோ(டு)**
**உயரும்விண் கமலப் பன்மூன்(று)**
**உருகுணம் உடையோர் தம்மை**
**இயலுறு புவியோர் போற்றும்**
**ஈசன்என்று எண்ணல் தாமே.**

**தெளிவுரை:** மயில், குயில், சிவந்த கால்களையுடைய அன்னம், வண்டு, கண்ணாடி, பன்றி, கூர்மையான பற்களையுடைய பாம்பு, சந்திரன், சூரியன், கடல், கொக்கு, ஆகாயம், தாமரை என மேவும் பதின் மூன்றுடைய குணங்களைப் பெற்ற மாந்தரை இவ்வுலகின்கண் தெய்வத்திற்கு ஒப்பாகக் கருதலாம்.

இவையனைத்தும் சுபத்துக்குரியதாகக் கொள்ளப் படுதல் மரபு.

அயில் – கூர்மை, ஆழி – கடல், கமலம் – தாமரை, பன்றி – ஈசன் பன்றிக்குட்டிக்குப் பால் கொடுத்ததும் திருமால் பூவராகமாக விளங்கியதும் இவண் நோக்குக.

## 3. எல்லாம் கடவுள் செயல்

பாடற்குறிப்பு: *ஒரு காட்டில் மரத்தின் கிளையொன்றில் இரண்டு புறாக்கள் இனிது மகிழ்ந்திருந்தன. அந்த நேரத்தில் வேடன் ஒருவன் மரத்தின் கீழேயிருந்து அப்புறாக்களைக் கொல்வதற்காகக் குறி பார்த்திருந்தான். அப்புறாக்களைக் கவர்வதற்காக இராஜிப் பறவையொன்று வானத்தில் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. இந்நிலையைக் கண்ட ஆண்புறா தன் அருகிலிருந்த பெண் புறாவை நோக்கி வருத்தத்துடன் கூற, அப்பெண் புறா யாவும் ஈசனின் செயலேயன்றி நாம் நினைத்தபடி யாவும் நடைபெறாது எனக் கூறியது. புற்றிலிருந்து வெளிப்பட்ட பாம்பு அவ்வேடனைக் கடிக்க, அவன் கையிலிருந்த அம்பு விடுபட்டுச் சென்று இராஜாளியைக் கொன்றழித்தது. இச்செயலை விளக்கும் பாடல் வருமாறு:*

### அறுசீர் விருத்தம்

காந்தொருவன் கணைதொடுக்க மேற்பறக்கும்
ராசாளி கருத்துங் கண்டே
உரைந்துசிறு கானகத்தில் உயிர்ப்புறா
பேடுதனக்(கு) உரைக்குங் காலை
விரைந்துவிடந் தீண்டவுயிர் விடும்வேடன்
கணையால்வல் லூறும் வீழ்ந்த
அரன்செயலே யாவதல்லால் தன்செயலால்
ஆவதுண்டோ அறிவுள் ளோரே.

**தெளிவுரை:** *அறிவு சார்ந்த பெருமக்காள்! ஒரு வேடன் மறைந்திருந்து, மரத்தின்மேல் அமர்ந்திருந்த ஜோடிப் புறாக்களைக் கொல்லும் பொருட்டுக் குறிபார்த்திருந் தான். அதே சமயத்தில் ராஜாளியொன்று அப்புறாக் களைக் கவ்வும் பொருட்டு வானத்தில் வட்டமிட்டது. இத்துன்ப நிலையை அறிந்த ஆண்புறா, தன் பெண்புறாவைப் நோக்கி உரைக்கும் போது, ஒரு பாம்பு வேடனைக் கடிக்க அவன் விடம் ஏறப்பெற்று உயிர் நீத்தான். அவன் கையிலிருந்த வில்லிலிருந்து அம்பு விடுபட்டு ராஜாளியைக் கொன்று வீழ்த்தியது. வேடனைப் பாம்பு கடித்து வீழ்த்தியது. புறாக்களுக்கு ஏற்பட இருந்த ஆபத்து விலகியது. இவ்வாறான அருட் செயல்கள் யாவும் ஈசனால் நிகழ்வதன்றித் தனது செயலெனச் சொல்லப்படுமோ!*

**4. ஆலவாய் அழகராகிய சொக்கநாதருக்குப் பணி செய்க.**

**பாடற்குறிப்பு:** *புலவர் ஒருவர் எளிதில் விளங்குமாறு பாடல்களால் இறைவனைப் பாடிப் போற்றி வந்தார். இப்பாட்டு மிகச் சாதாரணமானது. சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பொருள் கொள்ளுமாறு செய்யுள் இருந்தாலல்லவா பாடலைப் பெருமையாக நினைக்க முடியும் என்று சிலர் பேசினர். அவர்கள் மகிழுமாறு இப்பாடல் அமைக்கப் பெற்றது. இது காளமேகப் புலவரின் தனிப்பாடலாகவும் கொள்ளப்படுகிறது.*

**நேரிசை வெண்பா**

**பண்புளருக் கோர்பறவை பாவத்திற் கோரிலக்கம்**
**நண்பிலரைக் கண்டக்கா னாற்காலி – திண்புவியை**

**ஆள்வார் மதுரையழகியசொக் கர்க்கரவம்**
**நீள்வா கனநன் னிலம்.**

**தெளிவுரை:** நல்ல பண்புடையவர்களுக்குத் தான தருமம் செய்க. பாவிகள்ளைக் கண்டால் அஞ்சி வெளியேறுக. நண்பில்லாத பகைவரைக் காண நேர்ந்தால் அவ்விடத்தில் நிற்காதே. இவ்வுலகத்தைப் புரந்தருளும் மதுரைச் சொக்கநாதருக்குப் பணிவிடை செய்து நலம் காண்க.

**பாடல் விளக்கம்:** இவ்வெண்பாவில் பறவை என்பதற்கு "ஈ" என்னும் சொல்லைக் கொண்டு தானதருமம் செய்க எனக் கொள்க. இலக்கம் என்பதற்கு "5" என்னும் இலக்கத்தைக் கொண்டு அஞ்சு - அச்சம் கொள்க. பாவம் செய்ய அஞ்சுக எனப் பொருள் காண்க. நாற்காலி என்னும் சொல்லுக்கு நான்கு கால்களுடைய விலங்கு என்க. நீங்குக என்னும் பொருளைக் கொள்க. அரவம் என்பது பாம்பு. இதனைப் பணி எனப் பகர்தலும் அமையும். வாகனம் இடபம் -விடை எனவும், நிலம் - "செய்" எனவும் பொருள் கொண்டு அரவம் வாகனம் நன்னிலம் என்பதற்குப் 'பணிவிடை செய்' என்னும் வகையில் பொருள் கொள்க.

## 5. மும்மூர்த்திகள் வாழ்கின்ற இடமும் கொள்கின்ற உணவும் கூறுதல்:

**பாடற்குறிப்பு:** மும் மூர்த்திகளாகிய பிரமன், திருமால், சிவன் ஆகியோரைப் பற்றிச் சிலர் சிந்தித்துக் கொண்டு இருந்தனர். அப்போது ஒருவர் ஈசன் சிறுத் தொண்டரை யாசித்துப் பிள்ளைக் கறி வேண்டினார் என்றார். திருமால் உலகத்தையே ஆகாரமாக

உண்டவர் என்றார் இன்னொருவர். இந் நிலையில் மூன்றாமவராகிய புலவர் ஒருவர் ஒரு பாடலையும் பாடினார். இப்பாடல் சிறு பாட பேதங்களுடன் காளமேகப் புலவரின் பாடலாகவும் காணப்படுகிறது.

### நேரிசை வெண்பா

**சிறுவ னளைபயறு செந்நெற் கடுக்கை**
**மறிதிகிரி தண்டு மணிநூற் – பொறியரவம்**
**வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்**
**கற்றாளம் பூவே கரி.**

**தெளிவுரை:** பிரமனுக்கு உணவு பயறும், செந்நெல்லும் ஆகும். ஆயுதம் தண்டும், வசிக்கும் இடம் தாமரையும், ஆபரணம் பூணூலும், அன்னம் வாகனமும் ஆகும். திருமாலுக்கு உணவு வெண்ணெயும் பூமியும், சக்கரப் படை ஆயுதமும் பாம்பணை இருப்பிடமும் கருடன் வாகனமும் ஆகும். சிவபெருமானுக்குச் சிறுத் தொண்ட நாயனாரின் புதல்வனான சீராளன் உணவும், கொன்றை மலர் மாலையும், இடபம் வாகனமும் ஆகும். அவர் கையில் மான் ஏந்தி விளங்குபவராகிக் கயிலை மலையில் வீற்றிருப்பவர்.

சிறுவன் – சீராளன். அளை – வெண்ணெய். கடுக்கை – கொன்றை மலர். மறி – மான் கன்று. திகிரி – சக்கரப் படை. ஏறு – இடபம். புள் – கருடன்.

### 6. திருவிழாக் காலங்களில் உற்சவ மூர்த்திகள் தமது வாகனங்களில் ஏறித் திருவீதியுலா வருதலை இயம்புதல்.

**பாடற்குறிப்பு:** கல்விமான்கள் சிலர் திருவிழா நடைபெறும் இடத்திற்குச் சென்றிருந்தனர். விநாயகர்,

முருகக்கடவுள், உமாதேவியார், சிவபெருமான் ஆகிய உற்சவ மூர்த்திகளை உரிய வாகனத்தில் அமைத்துத் திருவீதியுலா நடைபெற்றது. அதனைக் கண்டு மகிழ்ந்து புலவர் ஒருவர் பாடிய பாடல் இது. இப்பாடலில் பாட்டு எண் 4-இல் உள்ளபடி சில சொற்களுக்குச் சிறப்புப் பொருளை ஆய்ந்து இவண் உரைக்கப் பெற்றது. இது காளமேகப் புலவர் தனிப்பாடலாகவும் கொள்ளப்படுகிறது.

**கட்டளைக் கலித்துறை**

**கரியென்னு பொன்மிகும் பையேறக்**
**கற்றவர் சூழ்ந்து தொழ**
**எரியென்னும் செல்வன் துலாத்தினி**
**லேறி இருண்டமஞ்சு**
**சொரிகின்ற நாகமின் சோற்றினி**
**லேறித் தொடர்ந்துவர**
**நரியென்று சொந்தக் கனலேறி**
**வந்தது நங்களத்தே.**

**தெளிவுரை:** யானை முகத்தையுடைய விநாயகப் பெருமான் பெருச்சாளி என்னும் வாகனத்தில் ஏறி உலா வருகின்றார். அனற் பொறியாகத் தோன்றிய செல்வனான ஆறுமுகக் கடவுள் மேகத்தை நோக்கி மகிழ்ந்தாடும் மயில்மீது ஏறியமர்ந்து வருகின்றார். மலையினில் தோன்றி வளர்ந்த உமாதேவியார் அன்ன வாகனத்தில் ஏறியமர்ந்து உலா வருகின்றார். இவர்கள் தொடர்ந்து வர, சிவபெருமான் இடப வாகனத்தில் ஏறி உலா வரலானார்.

கரி – விநாயகர், பொன்மிகும்பை – பெருச்சாளி, எரி – ஈசனின் நெற்றிக்கண்ணின் நெருப்புப் பொறியாக எழுந்த முருகக் கடவுள்.

நாகமின் – மலைமகள், உமையம்மை. சோறு – அன்னம், அன்ன வாகனம். நரி என்பதைச் சம்புகம் என்னும் சொல் கொண்டு பொருள் காண்பர். இதற்குச் சம்பு என்னும் சொற்கு ஏற்றவாறு சிவபெருமான் எனப் பொருள் கொள்க. சொந்தம் கனல் – நம் நெருப்பு – நம் தீ நந்தி – இடப வாகனம் என்க.

## 7. சிவபெருமான் தனது திருவோட்டை எனக் களித்துப் பிச்சையேற்க வைத்தனனே எனல்:

**பாடற்குறிப்பு:** *ஈசனே முழுமுதற் கடவுள். அவரே எல்லோருக்கும் அருள் புரிபவர். அவர் தனது ஒரு கூற்றைத் திருமாலுக்கு வழங்கினார். அவருடைய மற்றொரு கூற்றை உமாதேவியார் எடுத்துக் கொண்டார். இருபாதியும் கொடுத்த பின் யாது எஞ்சியுள்ளது? சங்க நிதி வானத்திலும் ஆதிசேடன் பாதாளத்திலும் இருந்து கொடைத் தன்மையைப் போஜ மகாராஜனுக்குக் கொடுத்தருள எனக்குக் கையிலிருந்த பிச்சையேந்தும் ஓட்டைக் கொடுத்தனனே! இவ்வாறு வறுமையில் வாடிய ஒரு புலவரின் கற்பனை வளத்தால் நயம் தோன்ற எழுந்த பாடல் இது.*

**கட்டளைக் கலித்துறை**

ஒருபாதி மால்கொள மற்றொரு
பாதி உமையவள் கொண்(டு)
இருபாதி யானும் இறந்தான்
புராரி இருநிதியோ
பெருவா ரிதியிற் பிறைவானிற்
சர்ப்பம் பிலத்திற்கற்பத்
தருவான போஜற்கா டையுங்கை
யோடென்கை தந்தனனே.

தெளிவுரை: ஈசனின் ஒரு பாதியில் திருமால் விளங்குபவர். மற்றொரு பாதியை உமாதேவி எடுத்துக் கொண்டார். எனவே சிவபெருமான் தனது உருவத்தை இழந்து விட்டவர் ஆவார். இந்த நிலையில் பெரும் செல்வமாக விளங்குகின்ற சங்க நிதி பதும நிதி ஆகிய இரண்டும் போஜராஜனுக்கு அளித்து உதவின. ஆதி சேடன் கற்பகத்தரு போலும் வள்ளல் தன்மையை அவனுக்கு வழங்கியது. ஆனால் எனக்கோ ஈசனின் கையோட்டினைப் பெறச் செய்து பிச்சையேற்க வைத்தனனே.

சர்ப்பம் – ஆதிசேடன், பிலம் – பாதாளம், மூன்றாம் அடியில் ஐந்தாம் சீர் விளங்காய்ச் சீராக வருதல். கட்டளைக் கலித்துறைக்கு உரியது. இதனை ஒற்று நீக்கிக் காண்க. கையோடு – 1) ஈசனின் கரத்தில் உள்ள திருவோடு. 2) நான் கையில் ஏந்தும் வகை, என் கையோடு என்பது போல.

## 8. விநாயகக் கடவுளின் தோற்றப் பொலிவை வியந்து கடவுளர் புரியும் செயல்களைக் கற்பனை நயம் தோன்ற ஏத்துதல்:

பாடற்குறிப்பு: விநாயகப் பெருமானை நினைத்துச் செய்யும் செயல்கள் யாவும் கைகூடும். அப்பெருமானின் தோற்றமோ விந்தைக்குரியதாக அமையப் பெற்றுள்ளது. யானை முகமும் பெரிய வயிறும் கொண்டு விளங்கும் அப்பெருமானைக் கண்டு மகிழாதவரும் இல்லை; வணங்கிப் போற்றாதவரும் இல்லை. இப்பெருமானை நினைந்து மகிழ்ந்தார் ஒரு புலவர். உடனே தேவர், முருகக் கடவுள், சிவபெருமான், திருமால், பிரமன் ஆகியோர்களையும் எண்ணி இனிமை விளங்கப் பாடலானார்.

*இது காளமேகப் புலவர் தனிப்பாடலாகவும் கொள்ளப்படுகிறது.*

எண்சீர் ஆசிரிய விருத்தம்

**கம்பமத கடகளிற்றான் தில்லை வாழும்**
**கணபதிதன் பெருவயிற்றைக் கண்டு வாடி**
**உம்பரெலாம் விழித்திருந்தார் அயிற்வேற் செங்கை**
**உரையவறு முகவனுங்கண் ணீரா றானான்**
**பம்புசுடர்க் கண்ணனுமோ நஞ்சுண் டான்மால்**
**பயமடைந்தான் உமையும்உடல் பாதி யானாள்**
**அம்புவியைப் படைத்திடுவ(து) அவமே என்(று)**
**அயனும் அன்னம் இறங்காமல் அலைகின்றானே.**

**தெளிவுரை:** *தில்லையில் எழுந்தருளி வீற்றிருக்கின்ற மதங்கொண்ட யானை முகத்தையுடைய கணபதிக் கடவுளின் பெருவயிற்றைக் கண்டு தேவர்களெல்லாம் ஏக்கத்தால் வாடி நித்திரையின்றி விழித்திருக்கின்றனர். கூரியவேற் படையைக் கையில் கொண்டுள்ள அறுமுகக் கடவுள் கண்ணீரை ஆறாகப் பெருக்கி வருத்தம் கொண்டுள்ளார். நெருப்புக் கண்ணைக் கொண்டு விளங்கும் சிவபெருமான் பித்தம் கொண்டு நஞ்சினை உட்கொண்டார். திருமால் அச்சம் கொண்டவராகிப் பாற்கடலில் ஒதுங்கிக் கொண்டார். உமாதேவியார் பாதியுடலாகி மெலிந்து போனார். இவ்வுலகத்தைப் படைக்கும் பிரமன் தன் செயல் பயனற்றதோ என்று எண்ணி உணவு கொள்ளாது பட்டினியாய்த் திரிகின்றாரே.*

**பாடல் விளக்கம்:** *விநாயகப் பெருமானுடைய பெரு வயிற்றைக் கண்டு மகோதரம் என்னும் நோய்*

கண்டதோ என அச்சம் கொள்வதாய்க் கற்பனை கொண்டு இப்பாடலின் கருத்து அமைக்கக் பெற்றது.

தேவர்கள் கண்களை இமைக்காதவர்களாய் விளங்குபவர் என்பதை விழித்திருந்தார் என்னும் சொல்லால் ஓதப்பெற்றது. ஆறுமுகக் கடவுள் பன்னிரு விழிகளை உடையவர். இதனை, ஈர் ஆறு (2 × 6) பன்னிரண்டு என்னும் பொருள் கொண்டு நோக்குக. சிவபெருமான் தேவர்களைக் காத்தருளுமாறு நஞ்சினை உட்கொண்டு நீலகண்டராக விளங்கிய அருட்செயல் நஞ்சுண்டான் எனவும், திருமால் பாற்கடலை அறிதுயில் செய்தலைப் “பயமடைந்தான் எனவும், உமாதேவியார் ஈசனின் இடப்பாகத்தில் விளங்குவதை உடல் பாதியானாள் எனவும் இவண் நகைச்சுவையாகச் சொல்லப்பட்டதாம்.

அன்னப்பறவையை வாகனமாக விளங்கும் பிரமனின் சிறப்பும் இவண் அன்னம் என்பதற்கு உணவு எனக் கொண்டும், நகைச்சுவை பொலிய உரைக்கப்பட்டதாம்.

கண்ணீராறு – கண் ஈராறு, கண்ணீர் ஆறு.

## II. இயற்கை

### 9. சொற்புத்தி கேளாத புதல்வர், கணவனை மதிக்காத மாதர் முதலானோரை உரைத்தல்.

**பாடற்குறிப்பு:** ஒரு வீட்டின் தெருப்புறத்தில் நின்று கொண்டு ஒருவன் தன் தந்தையை வைது கொண்டிருந்தான். அவன் தாயும், மகனுடன் சேர்ந்து ஏசத் தொடங்கினாள். இவர்களுடைய ஏச்சுக்களைப் பொறுக்க முடியாத தந்தை வீட்டினுள்ளிருந்து

வெளியே வந்தான். அத்தருணத்தில் புலவர் ஒருவர் அவ்விடம் வரவும், தந்தை தனது அவல நிலையைப் புலவரிடம் சொல்லத் தொடங்கினார். அப்புலவர் அவர்களைச் சமாதானப்படுத்தித் தந்தைக்கு உரைத்த பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

பிள்ளைதான் வயதில் மூத்தால்
பிதாவின்சொற் புத்தி கேளான்
கள்ளினற் குழலாள் மூத்தால்
கணவனைக் கருதிப் பாராள்
தெள்ளற வித்தை கற்றால்
சீடனும் குருவைத் தேடான்
உள்ளநோய் பிணிகள் தீர்ந்தால்
உலகர்பண் டிதரைத் தேடார்.

**தெளிவுரை:** ஒருவன் வயதில் முதிர்ச்சி கொண்டு உடல் பலத்தோடு விளங்குவானாகில், அவன் தன் தந்தையின் சொற்களைக் கேட்டு அதன் வழியில் நடக்க மாட்டான். ஒரு பெண் வயதில் முதிர்ந்தவளாகி விட்டால், அவள் தன் கணவனை ஒரு பொருட்டாக மதிக்கமாட்டாள். கல்வியில் நன்கு தேர்ச்சி பெற்று எல்லாக் கலை ஞானங்களையும் அறிந்த பின்னர் ஒருவன் தனது குருவைத் தேடிச் செல்ல மாட்டான். அது போலவே உடலில் பிணிகள் தீர்ந்த பிறகு உலக மக்கள் மருத்துவரை நாடிச் செல்லமாட்டார்கள். இது இயற்கை.

**சிறப்புரை:** முதுமையுற்ற ஒருவனை மைந்தரும் மனைவியும் நாட மாட்டார்கள் என்பது இவண் உரைக்கப் பெற்றது. அங்ஙனமே முதுமையடைந்த

மாதரசியும் தன் கணவனைக் கருதமாட்டாள் என்பதும் இவண் தெளிவு.

**10. புன்மைக் குணம் உடையவர்களைப் பாராட்டியும் சீராட்டியும் சிறப்பித்தாலும் பெருமையுடையவர்களாக ஆகமாட்டார்கள்.**

பாடற்குறிப்பு: ஒரு கள்ளனை விலங்கிட்டுத் தெரு வழியாகக் காவலர்கள் சிலர் அரசவைக்கு நீதி விசாரணைக்காக அழைத்துச் சென்றார்கள். அவனைக் கண்டு செல்வந்தர் ஒருவரின் மகள் காதல் கொண்டாள். அவனையே தனது கணவனாக வரித்து விட்டாள். அவனைத் தான் மணந்து கொள்ள வேண்டும் என்று தன் தந்தையிடம் முறையிட்டாள். அவர் தனது ஒரே மகளின் விருப்பத்தை நிறைவேற்றும் விதத்தில் அரசன்பால் சென்று முறையிட்டு, அக்கள்வனைத் தன் மகளுக்கு மணம் முடித்து வைத்தார். அக்கள்வன் தான் பெற்ற விடுதலையையும் ஒரு செல்வந்தரின் மகளைத் திருமணம் கொண்டு வாழும் பேற்றையும் ஒரு பொருட்டாகக் கொள்ள வில்லை. உயர்ந்த ரக அரசபோகத்தையும் விருந்துணவு முதலான உபசாரத்தையும் பெரிதாகக் கருதவில்லை. மாறாக அப்பெண் அணிந்துள்ள பொன் ஆபரணங்களைக் களவு செய்து வெளியேறி விடவேண்டும் என நினைத்து, அதனையே செய்தான். இதனைக் கண்ட புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

குக்கலைப் பிடித்து நாவிக்
கூண்டினில் அடைத்து வைத்து

மிக்கதோர் மஞ்சள் பூசி
மிகுமணஞ் செய்தலுந்தான்
அக்குலம் வேற தாமோ
அதனிடம் புனுகுண் டாமோ
குக்கலே குக்கல் அல்லால்
குலந்தனில் பெரிய தாமோ.

**தெளிவுரை:** *ஒரு நாயைப் பிடித்துக் கத்தூரி நறுமணம் கமழும் கூண்டில் வைத்துப் பாதுகாத்து மஞ்சள் முதலான வாசனைத் திரவியங்களைப் பூசிச் சிறப்புச் செய்தாலும், அதன் பிறவிக் குணம் வேறாகி விடுமோ! அதனிடம் புனுகுபோன்ற நறுமணம் கமழுமோ! நாய், நாய் அல்லாது வேறு பெருமையுடைய குலத்தது ஆகுமோ!*

குக்கல் – நாய், நாவி – கத்தூரி மணம்.

**11. செல்வந்தரைச் சார்ந்து மேவி மேலும் சன்மானங்களைத் தருதலும் வறியவர்களைக் கண்டு பாராமுகமாக இருக்தலும் உலக இயல்பு.**

**பாடற்குறிப்பு:** *செல்வந்தர் ஒருவரின் வீட்டுத் திருமணம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. ஏராளமான பிரமுகர்கள் அத்திருமண நிகழ்ச்சியைக் கண்டு "மொய்" என்னும் பெயரால் பரிசுப்பொருள்களை வழங்கினார்கள். திருமணம் நடத்திய செல்வந்தரின் திருமணச் செலவை விட அவருக்குப் பரிசுப் பொருள் களாக வந்த பொருள்களின் மதிப்பு அதிகம். அத்திருமணம் நடைபெறும் இடத்திற்குச் சற்றுத் தொலைவில் பசித்த முகத்தோடும் வறுமையின் நிலையோடும் இருந்த வறியவர்களை எவரும் கண்டு*

கொள்ளவில்லை. இதனைக் கண்ட புலவர் ஒருவரின் கூற்றாக அமைந்த பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**கதிர்பெறு செந்நெல் வாடக்**
**கார்குலம் கண்டு சென்று**
**கொதிதிரைக் கடலிற் பெய்யும்**
**கொள்கைபோற் குவல யத்தே**
**மதிதனம் படைத்த பேர்கள்**
**வாடினோர் முகத்தைப் பாரார்**
**நிதிமிகப் படைத்தோர்க் கீவார்**
**நிலையிலார்க் கீய மாட்டார்.**

**தெளிவுரை:** கதிர்ப்பயிராகச் செந்நெல் விளைந்து மேலும் தண்ணீருக்காக வாடியிருத்தலைக் கண்டாலும் மேகம் ஆங்கே மழையைப் பொழியாது. அலை மிகுந்து விளங்கும் கடலில் பெய்யும். இத்தன்மையைப் போன்று செல்வந்தர்கள், வறுமையால் வாடியிருப்பவர்களைப் பார்த்தும் பாரா முகமாய் இருப்பார்கள். ஆனால் செல்வம் பெருகி விளங்குபவர்களுக்கே தருவார்கள்; ஏழைகளுக்கு உதவி செய்யமாட்டார்கள்.

**12. கரும்பு திரிந்தாலும் சுவை குன்றாது. ஆனால் நரம்பு திரிந்தால் இசை குன்றிவிடும்.**

**பாடற்குறிப்பு:** ஓரிடத்தில் கரும்பு வெட்டி ஆலைகளில் இட்டுச் சாறெடுத்து வெல்லம் காய்ச்சிக் கொண்டிருந்தனர். அருகாமையில் இரும்பைப் பழுக்கக் காய்ச்சி வளைத்து ஆயுதங்களைத் தயாரித்துக் கொண்டிருந்தனர். ஆங்கு ஒரு வழிப்போக்கர்

*தம்பூராவை மீட்டிக்கொண்டு வந்தார். அவர் தன்னை மறந்து மீட்டிக்கொண்டு பாடுகையில் அதன் நரம்பு ஒன்று அறுந்துவிட்டது. இசையும் கெட்டது. இதனைக் கண்ட புலவர் ஒருவரின் பாடல் இது.*

**கலி விருத்தம்**

**அரும்பு கோணிடில் அது மணம் குன்றுமோ**
**கரும்பு கோணிடிற் கட்டியும் பாகுமாம்**
**இரும்பு கோணிடில் யானையை வெல்லலாம்**
**நரம்பு கோணிடில் நாமதற் கென்செய்வோம்.**

**தெளிவுரை:** *முல்லை அரும்பு கோணுதல் ஆனாலும் அதன் நறுமணம் குன்றுமோ! கரும்பு வளைந்திருந்தாலும் அதன் சுவை குறையாது வெல்லக் கட்டியைத் தரும். இரும்பு வளைந்தால் யானையை வெல்லும் தன்மையில் அங்குசம் முதலான ஆயுதங்களைத் தயாரிக்கலாம். தம்பூராவை மீட்டும் நரம்பு தளர்ந்து விட்டால் எதுவும் செய்ய முடியாது. இசை வராது.*

**பாடற்குறிப்பு:** *நரம்பு என்பதற்கு நமது தேகத்தின் நரம்பு எனக் கொண்டு உடல் கெடும் என உரைப்பினும் அமையும். அதே போன்று அரும்பு என்பதை மஞ்சள் அரும்பு எனக் கூறுதலும் உண்டு.*

## 13. அரியதாகிய ஐந்து நிலைகள்:

**பாடற்குறிப்பு:** *சிலர் உலகின் நிலைகளைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு இருந்தனர். ஒருவர், கடலின் நீர் வற்றுமா என்றார். இன்னொருவர் குறி சொல்லும் குறத்தி சொல்வது யாவும் சத்தியப் பிரமாணமாகுமா என்றார். மருந்துண்டு இளமை காணல் இயலுமா என்றார் பிறிதொருவர். வேசியர் அன்புடையராதல்*

ஒல்லுமோ என்றார் வேறு ஒருவர். மற்றும் ஒருவர் ஆட்சி புரியும் அரசன் யாரிடமாவது உண்மையான அன்புடையவனாக விளங்குவானோ என்றார். இந்நிலையில் எழுந்தது இப்பாடல்.

**கலி விருத்தம்**

**குரைகடல் வறுமையும் குறத்தி யுண்மையும்**
**நரையற மருந்தையுண்(டு) இளமை நண்ணறும்**
**விரைசெறி குழலினாள் வேசையர் ஆசையும்**
**அரையர்அன்(பு) அமைவதும் யாண்டும் இல்லையே.**

**தெளிவுரை:** அலைகளை ஒலிக்கும் கடல் வற்றி விட்டது என்பதும், குறி சொல்லும் குறத்தியின் வாக்கு எப்போதும் மெய்யாகும் என்பதும், நரை மூப்பு வந்ததும் மருந்து உட்கொண்டு இளமை எய்தினர் என்பதும், வேசியர் ஆடவர்பால் உண்மையான அன்புடையவர் என்பதும், அரசர்கள் தனிப்பட்ட ஒருவர் பால் அன்புடையவராக விளங்குதலும் ஆகிய இவ்வைந்து நிலைகளும் எப்போதும் நிலைத்திருக்கக் கூடியதாகாது. இது மெய்யாகாது என்பது இவண் குறிப்பு.

**குறிப்புரை:** வேசியர் - பொது மகளிர். இவர்கள் பண்டைக் காலத்தில் பொது மகளிராகக் கருதப் பட்டனர். தற்காலத்தில் இத்தன்மையினர் எவரும் இல்லை எனக் கொள்க. அரசன் பொது நிலையாக மேவி நடுநிலையில் இருந்து நீதி வழங்குபவனாய் இருத்தலை யொட்டி அவன் தனியொருவனுக்கு அன்புடையவனாகக் கருதப்படுவதில்லை. இத் தன்மையில் நடுநிலை வகிக்கும் மன்னன் செய்கையை,

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்" (குறள்: 388)

*எனச் சாற்றும் திருக்குறளையும் காண்க.*

**14. எளியனை வலியன் வதைத்தலால் வலியனை தெய்வம் வதைக்கும்.**

பாடற்குறிப்பு: *முடவன் ஒருவன் ஓரிடத்தில் அமர்ந்து யாசித்துக்கொண்டிருந்தான். அவனிடம் சில்லரைக் காசுகள் சேர்ந்தன. அவற்றைப் பார்த்துக் கொண்டிருந்த ஒரு கள்ளன் அக்காசுகளைப் பறித்துக் கொண்டு ஓடத் தொடங்கினான். முடவனோ செய்வதறியாது ஓலமிட்டுப் புலம்பிக் கொண் டிருந்தான். ஓடிய கள்ளன் இருளிடத்தில் சென்ற போது ஆங்கிருந்த சிறு குழி ஒன்றில் தடுத்து விழச் செய்தது பக்கத்தில் இருந்த பாறையின் மீது. அவன் தலை அடிபட்டு காயத்தை உண்டாக்கியது. அவன் கால் இடர்தலால் ஆங்கிருந்த வெறிநாய் ஒன்றும் கடித்தது. அவனைக் கண்ட காவலர் ஒருவர் அரசன் அவையில் கொண்டு சென்று நிறுத்தினர். அக்கள்ளன் மரண அவத்தையில் இருந்து விடுபடத் தான் செய்த கொடுமையைச் சொல்லி உயிர் துறந்தான். இந்நிலையில் அவையில் இருந்த புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

*இத்தன்மையில் பாடல் எண் 3-இல் உரைத்தவாறும் காண்க.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**முடவனை மூர்க்கன் கொன்றால்**
**மூர்க்கனை முனிதான் கொல்லும்**

மடவனை வலியான் கொன்றால்
மறலிதான் அவனைக் கொல்லும்
தடவரை முலைமா தேயித்
தரணியில் உள்ளோர்க் கெல்லாம்
மடவனை யடித்த கோலும்
வலியனை யடிக்கும் கண்டாய்.

**தெளிவுரை:** செழுமையான மாதரசியே! உடற்கூறு நன்கு அமையாத ஒருவனைத் துட்டன் ஒருவன் வதைத்தால் அவனை, அவனினும் வலிமை யுடையவன் வதைப்பான். அத்தகைய பெருத்த வலிமை கொண்டவனையும் இயமன் கொல்லக் கூடியவன். இவ்வுலகில் ஒரு ஏழையை அடித்த கோல் வலிமையுடையவனையும் அடித்துத் தாக்குதல் செய்யும் எனக் காண்பாயாக.

ஒரு மங்கையை நோக்கி உரைக்கும் மரபு வழிப் பாடலாயிற்று.

முடவன் – அங்கஈனன், மடவன் – எளியவன், ஏழை.

## 15. தீயவர்களுக்கு நன்மை செய்தாலும் துன்பமே வரும்.

**பாடற்குறிப்பு:** ஓர் ஊரில் கருமி ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் யாருக்கும் எந்த உதவியும் செய்ததில்லை. அதற்கு மாறாக எல்லோரையும் வலுச் சண்டைக்கு இழுத்தும், வம்பு செய்தும், அரசனிடம் முறையிட்டும் வழக்கிட்டும் தண்டனை வாங்கிக் கொடுப்பான். அக்கருமியைக் கண்டால் ஊரே நடுங்கும். அவன் பக்கத்து வீட்டில் ஒரு சாது குடியிருந்தார். அவர் அக்கருமியின் பக்கம் திரும்பவே

மாட்டார். ஆனாலும் அக்கருமி அச்சாதுக்கு ஏதேனும் துன்பம் செய்து விடவேண்டும் எனக் கருதினான். இந்நிலையில் அவனுடைய அந்திமக் காலம் நெருங்கியது. மருத்துவர்கள் அவனுக்கு 2 நாளில் உயிர் பிரியும் எனக் காலத்தைக் கணித்துக் கூறினர். உடனே அவன் தன் பக்கத்து வீட்டுச் சாதுவை அழைத்து, "ஐயா, இதுவரை நான் ஒரு புண்ணியமும் செய்ததில்லை. இன்னும் இரு தினங்களில் உயிர் பிரிந்துவிடும் என மருத்துவர்கள் கூறுகின்றார்கள். எனவே நான் செய்த பாவங்களுக்குக் கழுவாய் தேடவேண்டும் என்று கருதுகிறேன். என்னுடைய உயிர் பிரிந்து இடுகாட்டிற்குக் கொண்டு சென்றவுடனே என் கைத்தடியால் என் மார்பில் மூன்று தட்டுகள் தட்டி என்னுடைய கைவிரலில் உள்ள மோதிரத்தை எடுத்துக் கொள்ளுங்கள்." எனப் பரம இரகசியமாகத் தெரிவித்தான். அந்த அப்பாவிச் சாதுவும் அவ்வாறே செய்வதாக ஒப்புக்கொண்டார்.

சாது வெளியே சென்றதும் அக்கருமி தன் பக்கத்து வீட்டுக்காரரர் நீண்ட நாள் தன்மீது பகை கொண்டுள்ளவர் எனவும், தன் உயிர் பிரிந்து சுடலையில் எரிக்கும் முன்னால் என்னைத் தடியால் அடித்து என் மோதிரத்தையும் கவருதல் செய்வார் எனவும், அத்தன்மையில் அவருக்குத் தருகின்ற தண்டனையே தனக்கு ஆத்ம சாந்தியாகும் எனவும் எழுதி முத்திரையிட்டு அரசனுக்கு அனுப்பி விட்டார்.

இருதினங்கள் கழித்து அக்கருமியின் உயிர் பிரிந்து சுடுகாட்டில் எரிக்க முற்பட்டனர். அப்போது பக்கத்து வீட்டுச்சாது, கருமி தன்னிடம் சொல்லிய படி

*அரசனின் காவலர்கள் அச்சாதுவைக் கைது செய்தனர். அந்நிலையில் ஆங்கு வந்த தெய்வப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**தேளது தீயில் வீழ்ந்தால்**
**செத்திடா தெடுத்த பேரை**
**மீளவே கொடுக்கி னாலே**
**வெய்யுறக் கொட்ட லேபோல்**
**ஏளனம் பேசித் தீங்குற்**
**றிருப்பதை எதிர்கண் டாலும்**
**கோளினர் தமக்கு நன்மை**
**செய்வது குற்ற மாமே.**

**தெளிவுரை:** *நெருப்பில் விழுந்து துடிக்கும் ஒரு தேளைக் காப்பாற்ற வேண்டும் எனக் கருதி ஒருவன் எடுத்தானானால் அது தனது கொடுக்கினால் தன்னைக் காப்பாற்றியவனையே கொட்டித் துன்புறுத்தும். அதைப் போலப் பிறரை எள்ளி நகையாடியும், தீங்கு உரைத்தும், கலகம் செய்தும் வாழ்க்கை நடத்தும் ஒருவருக்குச் செய்கின்ற நன்மை தீங்காகவே வந்து சேரும்.*

*இது செய்கின்ற நற்செயல் குற்றம் உடையதாகத் திரிக்கப்பட்டுத் துன்பத்தை விளைவிக்கும் என்பதாம். இத்தன்மையில்,*

**"கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்**
**வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே – வம்புசெறி**
**தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து**
**நீங்குவதே நல்ல நெறி"**

*எனச் சாற்றப் பெறும் பாடலையும் காண்க.*

கோளினர் – தீங்கு செய்பவர். குற்றம் – தண்டனையை வாங்கித் தரும் என்பதாம்.

## 16. அன்புடைய அரசன்பால் அனைவரும் விரும்பி இருப்பர்:

**பாடற்குறிப்பு:** *கோப்பெருஞ்சோழன் சிறந்த அரசனாக விளங்கினான். அவனுடைய புதல்வர்கள் அவனை எதிர்த்து நின்றனர். அத்தருணத்தில் உயிர் நண்பராக விளங்கிய புலவர் புல்லாற்றூர் எயிற்றியனார் என்பவர் கூற்று, அம்மன்னனைச் சிந்தனையில் ஆழ்த்தியது. அவர் அரசபீடத்தைத் துறந்து வடக்குத் திசை நோக்கி உபவாசம் இருந்து உயிர் விடத் துணிந்தார். அவருக்கு உறுதுணையாக இருந்த அமைச்சர்கள் முதலானோரும், உயிர் நண்பரான பிசிராந்தையார் என்னும் புலவரும், மற்றும் பலரும் அம்மன்னனைச் சூழ்ந்து அன்பு பாராட்டினர். இச்செயலைப் பிற்காலப் புலவர் ஒருவர் எண்ணிப் பார்க்கலானார். அரசன் எல்லோரிடத்தும் அன்பு செலுத்திய பாங்கு அப்புலவரை நெகிழ வைத்தது. அதே போன்று குமண வள்ளலைக் கானகத்துக்குச் செல்ல வைத்து ஆட்சியைக் கவர்ந்த அவன் தம்பி அமணன் என்பவனையும் எண்ணிப் பார்த்தார். அமணனின குணத்தை விரும்பாத பலரும் காட்டில் இருந்த குமண வள்ளலை நாடிய பாங்கினையும் எண்ணிப் பார்த்தார். அன்புடைய மன்னரைச் சார்ந்து மேவிய சிறப்பால் எழுந்த பாடல் இது.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**ஏரிநீர் இருந்த போதங்(கு)**
**இருந்தன பட்சி யெல்லாம்**

மாரிநீர் மறுத்த போதப்
　　பறவையங் கிருப்ப துண்டோ
பாரினை ஆளும் வேந்தன்
　　பட்சமும் மறந்த போதே
யாருமே நிலையில் லாமல்
　　அவரவர் ஏகு வாரே.

**தெளிவுரை:** ஏரியில் நிரம்ப நீர் இருக்குமானால் குருகுகள் முதலான பறவைகள் அதன் தன்மை கண்டும் மீன் முதலான ஆகாரங்களை நாடியும் யாவும் வந்து சேரும். குளிர்ந்த நீர் இன்றியும் மழையின்றியும் இருப்பின் எத்தகைய பறவையும் ஆங்கு இருப்பதில்லை. அதனைப் போன்று உலகத்தில் ஆட்சி செய்யும் மன்னன் அன்புடன் விளங்குவானாயின் நல்லோர் பலர் உடனிருந்து விளங்குவார்கள். அவ்வரசன் அன்பற்றவனாயும் கொடுமை புரிபவனாயும் இருப்பின் அவ்வேந்தனைப் புறக்கணித்து வெளியேற்றுவார்கள்.

பட்சி – பறவை; பட்சம் – அன்பு.

## 17. தருமம் செய்தவர் கெடுவதில்லை தருமம் செய்யாதவர் பெருமையுடன் வாழ்வதில்லை.

பாடற்குறிப்பு: தனவந்தர் ஒருவர் எப்போதும் தருமம் செய்வதை இயல்பாகக் கொண்டிருந்தார். அவருக்குச் செல்வம் மேன்மேலும் வளர்ந்து கொண்டே வந்தது. விளை நிலமும் நன்கு விளைந்தது. சளைக்காமல் தருமம் செய்துவந்தார். அவ்வூரில் அவரைப் போலவே இன்னொரு செல்வந்தர் இருந்தார். அவர் ஒரு கருமி. யாருக்கும் எந்த உதவியையும் செய்ய மாட்டார். எல்லோரும் தான தருமங்களைச் செய்யும்

செல்வந்தரைப் பார்த்துப் புகழ்வார்கள். அவ் வார்த்தைகளைச் செவி மடுத்த போதெல்லாம் கருமியாகிய செல்வந்தருக்கு எரிச்சல் வரும். ஆயினும் அவரால் தனது உலோபத்தன்மையை மாற்றிக் கொள்ள முடியவில்லை.

ஒரு ஆண்டு மழையின்றி வறட்சி கண்டது. இது தொடர்ந்து மூன்றாண்டுகள் இருந்தன. தான தருமங்களைச் செய்யும் செல்வந்தரும் வறுமையென் னும் கொடுமையில் சிக்கினார். கருமியான செல்வந்தரும் இத்தகைய துன்பத்தில் வாடினார். அப்போதும் மக்கள், தான தருமங்களைச் செய்யும் செல்வந்தரின் நிலை கண்டு அவர் நன்றாகச் செழிப்புடன் வாழவேண்டும் என்று இறைவனை வேண்டித் துதித்தார்கள். அவருடைய செல்வம், நடுவூருள் பழம் தரும் மரம் இருந்து பலருக்கும் பயன் தரவல்லது எனப் போற்றினர். வறட்சி நிலை மாறி மழை வளம் பெருகிற்று. மீண்டும் செழுமை கண்டது. அச்செல்வந்தரும் பழையபடி தான தருமங்களைச் செய்யலானார். ஆனால் கருமியான செல்வந்தர் தனது குணத்தை மாற்றிக்கொள்ளாதவராய்த் தன் இயல்பிலேயே காலத்தைக் கழிக்கலானார். இந்நிலை யைக்கண்ட புலவர் ஒருவரின் பாடல் வருமாறு:

அறுசீர் ஆசிரிய விருத்தம்

மடுத்தவர் வாணர் தக்கோர்
மறையவர் இரப்போர்க் கெல்லாம்
கொடுத்தவர் வறுமை யுற்றால்
கொடாது வாழ்ந் தவர்யார் பூமேல்
எடுத்து நாடுண்ட நீரும்
ஈயாத காட் டகத்து நீரும்

அடுத்த கோ டையிலே வற்றி
அல்லதிற் பெருகுந் தானே.

**தெளிவுரை:** *தன்னை அடைந்தவர்களுக்கும், கல்விமான்களுக்கும், ஏழைகளுக்கும், வேத விற்பன்னர்களுக்கும் யாசகர்களுக்கும் ஒருவர் தருமம் செய்தும் தானம் கொடுத்தும் வறுமையடைந்தவர் உள்ளரோ! உலகத்தில் தான தருமங்களைச் செய்யாது புகழ் மிக்கவராய் வாழ்ந்தவர்கள் உளரோ! ஊர் மக்கள் அனைவரும் பயன்படுத்தும் நீர் நிறைந்த குளமும் கோடையில் நீர் வற்றி உலர்ந்து விடுகின்றது. நடுக் காட்டில் யாருக்கும் தண்ணீரை வழங்காத குளமும் வற்றி விடுகின்றது. ஆனால் அடுத்து மழை பொழிய மீண்டும் குளத்தில் நீர் நிரம்பி அனைவருக்கும் பயன் படுகின்றது.*

**குறிப்பு:** *இது,*

**ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்**
**பேர்றி வாளன் திரு** (குறள் 215)

*எனவும்,*

**"பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயனுடையான் கண் படின்"** (குறள் 216)

*எனவும் சாற்றப்பெறும் திருக்குறட் கருத்துக்களைச் சார்ந்ததாம் எனவும் காண்க.*

நாடுண்ட – ஊர் மக்களால் பயன் பெற்ற.

## 18. மன்மதனின் ஆற்றலுக்கு யாரே அடிபணிய மாட்டார்கள்.

**பாடற்குறிப்பு:** *ஒரு கிராமத்தின் ஒதுக்குப் புறமாக ஒரு ஆசிரமத்தை அமைத்து ஒரு சாது ஒருவர் வாழ்ந்து*

வந்தார். அவர் தவத்தை மேற்கொள்வதை விடக் கிரியைகளை விதிப்படி செய்யவேண்டும் என்பதில் கண்டிப்புடன் இருந்தார். அவருக்குச் சீடர்களும் வாய்த்தனர். ஒரு நாள் அவருடைய உள் சிற்றாடையை எலி கடித்து விட்டது. அது அச்சாதுவுக்கு வருத்தத்தை யளித்தது. அப்போது சீடர்கள் பூனை ஒன்றை வளர்த்தால் அது எலியைப் பிடித்துவிடும், என்றனர். பூனையை வளர்க்கத் தொடங்கினார். பூனைக்குப் பால் வேண்டும் என்பதால் பசு வளர்த்தார். பசுவுக்குப் புல் வேண்டும் எனவே ஒரு பெண்மணியை வேலைக்கு அமைத்தார். அப்பெண்மணிக்குப் போதுமான அளவு உணவு, உடுக்கை, இருப்பிடம் ஆகியவை தேவை யென்னும் நிலையில் அவர் அப்பெண்ணின் நாயகனாகவே மாறிவிட்டார். இந்நிலையில் அவர் மாறுவதற்கு மன்மதனின் அம்பலல்வா துகளைத்திருக்க வேண்டும். மன்மதன் மலரம்புகளி லிருந்து எவரும் தப்ப முடியாது எனக் கருதினார். அதனை யொட்டி எழுந்தது இப்பாடல்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

உணங்கி யொருகால் முடமாகி
ஒருகண் ணிழந்து செவியின்றி
வணங்கு நெடுவால் அறுப்புண்டு
வயிறும் பசியால் முதுகொட்டி
அணங்கு நலிய மூப்பெய்தி
அகல்வாயோடு கழுத்தேந்திச்
சுணங்கன் முடுவல் பின் சென்றால்
யாரைக் காமன் துயர் செய்யான்.

**தெளிவுரை:** நாய் ஒன்றுக்குக் கால் ஊனம்; ஒரு கண் இல்லை, குருடு, ஒரு பக்கம் காது இல்லை; வளைந்து

இருக்கும் வாலும் அறுபட்டது. வயிறு பசியால் முதுகு வரை ஒட்டிவிட்டது. முதுமையுற்ற நிலையில் அதன் கழுத்தில் ஒரு ஓடும் மாட்டிக்கொள்ள அதனை வெளியே தள்ளுவதற்கு வழியில்லாமல் திரிந்து அலைவதாயிற்று. இந்த ஆண்நாய் ஒரு பெண் நாயைக் கண்டதும் காமத்தின் வயப்பட்டு அதனைச் சுற்றி வரத் தலைப்பட்டது.

இத்தன்மையில் இழிவுடைய நாய், மன்மதனின் கணையால் அலைக்கழிக்கப்படுகின்றதென்றால் வேறு யார்தான் ஆட்பட்டுத் துயர் கொள்ள மாட்டார்கள்.

## 19. தேவையற்ற பொருளைத் திணித்தாலும், பயன் படாது:

**பாடற்குறிப்பு:** *வியாபார நுணுக்கம் தெரிந்துள்ளவர்கள் எத்தகைய பொருட்களையும் பிறரிடம் இனிமையாகப் பேசி விற்பனை செய்து பொருளீட்டுவர். அத்தகையோர் ஒருமுறை வாசனைப் பொருட்களை வேடர்களின் மத்தியில் விற்பனை செய்ய முனைந்து தோல்வியுற்ற தன்மையை விளக்குவது இப்பாடல்.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நானமென்பது மணங்கமழ் பொருளது
நாவிலுன் பதுவோ சொல்
ஊனு ணங்கவோய் மடந்தையர் அணிவதே
யுவர்முலைத் தடைக் கோட்டில்
ஆன தங்களது பூசினால் வீங்குவ(து)
அமையுமோ எனக் கேட்க
கான வேட்டுவச் சேரிவிட் டகன்றனர்
கடிகமழ் விலைவாணர்.

**தெளிவுரை:** ஒரு வர்த்தகர் கஸ்தூரி என்பது நறுமணம் கமழும் பொருள் எனச் சொல்ல எதிரில் இருந்த வேடுவர், இதனை நாவால் சுவைத்து உண்ணத் தகுந்ததோ என்று வினவினர். அதற்கு அவ்வர்த்தகர் இப்பொருளை மாதர்கள் பூசிக்கொள்வார்கள்; மார்பகத்தில் பூசிக்கொள்வது மகிழ்ச்சியை யளிக்கும் என்றனர். அதனைச் செவிமடுத்த வேடுவர் இக்கத்தூரியைப் பூசினால் வீக்கம் குறைந்து விடுமோ எனத் திரும்பவும் வினாவினர். இவர்களிடம் பேசுவதால் எப்பயனும் இல்லை எனத் தெளிந்த அவ்வியாபாரிகள் தாம் செய்யும் வர்த்தகத்தைக் கைவிட்டு அங்கிருந்து அகன்று சென்று விட்டனர்.

நானம் – புனுகு, கஸ்தூரி, வாசனைப்பொருள்.

## 20. ஒவ்வொருவரும் தனது செயல்திறனைக் கண்டு மகிழ்வர்:

**பாடற்குறிப்பு:** வில்லை வளைத்துத் தன் ஆற்றல் மிகு வீரத்தைக் காட்டிய இராமபிரானுடைய பெயரை யுடைய ஏகாலி ஒருவன் இருந்தான். அவன் பெயரே ஸ்ரீராமன் என்பது. அவனை யாரோ சிலர் ஏளனமாகப் பேசினர். அவன் மனம் மிகவும் வாடிவிட்டது. தன்னுடைய துன்பத்தை யாரிடமாவது சொல்லிப் பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும் எனக் கருதினான். அவன் எதிர் பார்த்தபடி புலவர் ஒருவர் வந்து அவனைப் பார்த்து வெகுவாகப் புகழ்ந்தார். அவன் செய்யும் பணி மிகவும் சிறப்புக் குரியது. எனப் பாராட்டிப் பாடினார். இது அப்பாடல்.

## நேரிசை வெண்பா

**சிரம்பார்த்தான் ஈசனயன் தேவிதனைப் பார்த்தான்**
**கரம் பார்த்தான் செங்கமலக் கண்ணன் – உரஞ்சேர்**
**சிலைவளைத்த திண்புயத்து வண்ணான்ஸ்ரீ ராமன்**
**கலைவெளுத்த வெண்மைதனைக் கண்டு.**

**தெளிவுரை:** *வில்லை வளைத்து வீரம் காட்டிய வலிமையான தோள்களையுடைய ஸ்ரீராமன் என்னும் பெயரைத் தாங்கியுள்ள வண்ணான் சலவை செய்து வெண்மையாக மேவும் துகிலின் வண்ணத்தைக் கண்டு பொறாமைப்பட்டு, அத்துணியை விடத்தன் கையிலுள்ள மண்டையோடு வெண்மையாக உள்ளதோ என்று சிவபெருமான் பார்க்கிறார்; பிரம தேவன் வெண்மையே வடிவாகிய தனது தேவியான சரஸ்வதியைப் பார்க்கிறார். தனது வெண்மையான கரத்தையும் கையில் உள்ள வெண்மையான சங்கையும் திருமால் பார்க்கிறார். யாவற்றின் சிறப்பாக அவன் வெளுத்த துணி இருந்தது. இப்பாடலைக் கேட்டு ஸ்ரீராமன் என்னும் ஏகாலி மனம் தெளிந்து மகிழ்வுற்றான் எனக் கொள்க.*

சிரம் – பிரமனின் மண்டையோடு. அயன் – பிரமதேவன்.

# III. அன்புடைமை

## 21. அன்புடன் உபசரித்து இடுகின்ற உணவு அமிர்தத்திற்கு இணையாகும்:

பாடற்குறிப்பு: *புலவர் ஒருவர், செல்வந்தர் ஒருவரின் வீட்டிற்குச் சென்றார். தான் ஒரு புலவர் என்றும், நெடுந் தொலைவிலிருந்து நடந்து வந்ததால்*

களைப்புற்று இருப்பதாகவும் கூறினார். அச்செல்வந்தர் தமிழின் சிறப்பும் புலவரின் பெருமையும் அறியாதவர். எனவே அப்புலவரை மதியாதவராய் வேலையின்றி ஊர் ஊராகத் திரிவதே உமக்குக் களைப்பை உண்டாக்கி விட்டதோ எனக் கடுமையாகக் கூறினார். புலவர், செல்வந்தருக்குப் பதில் சொல்வதை விடப் பேசாமல் இருப்பதே சிறப்பெனக் கருதினார். செல்வந்தரின் வீட்டு உணவு முப்பழங்களுடன் சிறப்பாகவே இருந்தது. ஆயினும் அச்செல்வந்தரின் சொல் உள்ளத்தில் கனல் போன்று எரிந்துக் கடும் பசியை உண்டாக்கிவிட்டது. சற்றுத் தொலைவில் ஏழைக் குடியானவன் ஒருவன் உழுது கொண்டிருந்தான். அவன் இப்புலவரைக் கண்டு வணங்கினான். புலவரும் அக்குடியானவனை அன்புடன் நலம் விசாரித்தார். வந்தவர் ஒரு புலவர் என்று அறிந்ததும் குடியானவன் பெருமகிழ்வுற்று ஆனந்தக் கூத்தாடினான். தான் இறைவனையே கண்டது போன்று பேரானந்தம் கொண்டான். தன்னிடம் தற்போது பழைய கூழ் மட்டும் உள்ளது என்றும் தன்னுடைய இல்லத்திற்கு வந்தால் அறுசுவை உணவைத் தயாரித்துக் கொடுப்பதாகவும் அழைத்தான். புலவர் குடியானவனிடம் உள்ள பழைய கூழை அமிர்தம்போல் உட்கொண்டு மகிழ்ந்தார். இந்நிலையில் எழுந்த பாடல் இது.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**ஒப்புடன் முகம லர்ந்தே**
**உபசரித்(து) உண்மை பேசி**

உப்பிலா கூழிட் டாலும்
உண்பதே அமிர்த மாகும்
முப்பழ மொடுபா லன்னம்
முகங்கடுத் திடுவா ராயின்
கப்பிய பசியி னோடு
கடும்பசி யாகுந் தானே.

**தெளிவுரை:** இருவர் உள்ளமும் ஒப்ப மகிழுமாறு முக மலர்ச்சியுடன் உபசரித்து மெய்யன்பு கலக்கப் பேசிச் சுவையில்லாத கூழ் உணவு அளித்தாலும், அது அமிர்தத்திற்கு ஒப்பாகும். அவ்வாறின்றி வாழை, மா, பலா என்னும் முக்கனிகளும் கூடிய அறுசுவை உணவை அன்பில்லாது அளித்தால் அது முன்னமேயே இருந்த பசியை மேலும் அதிகரிக்கச் செய்து கடும் பசியை உண்டாக்கி விடும்.

கப்பு – விரைவு.

## 22. தொலை தூரத்தில் இருந்தாலும் அன்பின் செயல் தடைப்படாது மலரும்.

**பாடற்குறிப்பு:** புலவர் பெருமக்கள் சிலர் குழுமி அருமையுடைய சங்க நூல்களை ஆய்ந்து இனிய பொருட்சுவை கவிச்சுவை முதலானவற்றைப் பருகிக் கொண்டிருந்தனர். அப்போது ஒருவர் கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் ஆகியோரின் அன்பின் ஆழத்தை விளக்கினார். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்ததும் இல்லை. அவர்களின் நட்பானது மிகவும் ஆழமாக வேரூன்றத் தலைப்பட்டது. இது அன்பு என்னும் தாய் ஆர்வம் என்னும் கருவால் நன்பு என்னும் குழந்தையைத் தருதலைத் திருவள்ளுவர்,

அன்பு ஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு" (குறள்–74)

என்று சாற்றியவாறு இருந்தது. இத்தன்மையில் இவர்கள் நட்பு,

"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்" (குறள்–785)

என்றாற் போல் மலர்ந்தது.

வடக்கிருந்து உயிர்துறக்க முனைந்த கோப்பெருஞ் சோழன் பிசிராந்தையார் வருவார் என உரைத்ததும், அப்புலவர் வந்து சேர்ந்த விதமும், ஆங்கு அவ் இருவர் பாலும் மலர்ந்த அன்பும் புலவரை நன்கு சிந்திக்க வைத்தது. இந்நிலையில் எழுந்த பாடல் இது.

கலி விருத்தம்

மங்குலைம் பதினாயிரம் யோசனை
மயில் கண்டு நடமாடும்
தங்குமா நூறு நூறாயிரம் யோசனை
தாமரை முகம் விள்ளும்
திங்களா மதற் கிரட்டி யோசனையுற
சிறந்திடு மாக் காம்பல
எங்கணாயகனு மன்பராயிருப்பவர்
இதயம்விட் டகலாரே.

**தெளிவுரை:** தரையில் வசிக்கும் மயில் ஐம்பதாயிரம் யோசனை தொலைவில் உள்ள கார்மேகத்தை அன்புடன் கண்டு தன் தோகையை விரித்து மகிழ்ந்து நடனம் புரிகிறது. குளத்தில் இருக்கும் தாமரை மலர் நூறு நூறாயிரம் யோசனை தூரத்தில் உள்ள சூரியனைக் கண்டு மகிழ்ந்து மலர்கிறது. அதற்கு இரு

மடங்கு தொலைவில் உள்ள அல்லி மலர் சந்திரனைக் கண்டு மகிழ்ந்து மலர்ச்சி பெறுகிறது. அத்தன்மையில் அன்பு செலுத்துவதற்குத் தூரம் ஒரு பொருட்டாக அமைவதில்லை. அன்புள்ளம் கொண்டவர்கள் எவ்வளவு தூரத்தில் இருந்தாலும் அவ்வன்பு தடை இன்றி வெளிப்படும்.

குறிப்பு: "எங்கள் நாயகன்" என்பவர் இறைவன் எனவும் அவ் இறைவனை மறவாமல் அன்பு செலுத்தும் அடியவர்களின் இதயத்தில் அவர் குடிகொண்டு வீற்றிருப்பவர் எனவும் அமையும். இத்தன்மையே மாணிக்கவாசகர், "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!" என்று உரைத்தருளிய பாங்கினையும் காண்க.

யோசனை – நூறுகல் தொலைவு, சிந்தனை.

## IV. கல்வி

### 23. கற்றோரே நல்லோர். அவர்கள் எங்கே இருப்பினும் மகிழ்ந்து உறவு கொள்வர்.

பாடற்குறிப்பு: கம்பர் ஒரு கவிச்சக்கரவர்த்தி. சோழ மன்னன் பால் மிகுந்த அன்பு வைத்திருந்தார். ஒருமுறை சோழ மன்னன் கம்பரைப் பொருட்டாகக் கருதாது புன்சொற்களை வீசிச் சிறுமைப்படுத்தினான். கம்பர் மிகவும் வருந்தினார். அப்புரவலனுக்குத் தகுந்த நெறியில் தமிழ்ப் புலவர்களின் பெருமையைக் காட்ட வேண்டும் எனத் துணிந்தார். இத்தகைய உறுதிப்பாடு சினம் தோன்ற வெளிப்பட்டது. உடனே அவர் அரசனை நோக்கி,

**"மன்னவனும் நீயோ வளநாடும் நின்னதோ
நின்னை யறிந்தோ தமிழை ஓதினேன் – என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு."**

எனப் பாடி வெளியேறினார்.

அங்கிருந்து புறப்பட்ட கம்பர் சேர நாட்டை யடைந்தார். மன்னவன்பால் ஒரு சாதாரண பணியாள் போலவும் ஒரு காலத்தில் கவிச்சக்கர வர்த்தி கம்பருக்குத் தொண்டு செய்ததாகவும் தெரிவித்தார். ஆங்கு ஏற்கனவே தொண்டு செய்து வந்த மன்னனின் பணியாள் ஒருவன் கம்பரிடம் வஞ்சகமாக உறவாடி ஆதாயம் தேட முயன்றான். அத்தருணத்தில் கலைமகளை வேண்டி ஒரு காற்சிலம்பைத் தருவித்து அதனை மன்னனிடம் கொடுத்தார். இது தனது மூதாதையர் சொத்து எனவும் அது போன்ற இன்னொரு சிலம்பு தனது தாயத்தானான இப்பணியாளிடம் உள்ளதென்றும் அதன்னை மன்னன் பெற்றுக்கொள்ள வேண்டும் எனவும் விண்ணப்பித்தார். கம்பர் அளித்த சிலம்பு மன்னனை வெகுவாகக் கவர்ந்தது. மற்றொரு சிலம்பும் கிடைக்கப் பெறின் தன் பட்டத்து ராணிக்கு அணிவிக்கலாம் எனக் கருதினான். எனவே, அச்சிலம்பினைத் தர மறுக்கும் அப்பணியாளைத் தண்டிக்கத் தொடங்கினான். உடனே அப்பணியாள் கம்பரைத் தனக்குத் தெரியாது எனவும் அவரைப் பயன்படுத்தி வஞ்சித்து ஆதாயம் தேட முற்பட்டது தவறு எனவும் முறையிட்டு மன்னிக்குமாறு வேண்டினான்.

உடனே கம்பர் கலைமகளைத் தியானம் செய்து வரவழைத்துத் தன்னிடம் உள்ள ஒரு கால் சிலம்பு ஒலிக்க செய்தார். மன்னன் முன்பு வைக்கப்பட்டிருந்த சிலம்பினைத் தன் காலில் சேர்த்துக் கொண்டு அருள் புரிந்தாள். அத்தருணத்தில் மன்னனும் கம்பரைத் தெரிந்து கொண்டு சிறப்புச் செய்தான். அறிவில் சிறந்த மேலோர் எங்கிருந்தாலும் சிறப்புடன் திகழ்வார்கள். கல்லாதவர்கள் தன் அருகே இருக்கும் கற்றுணர்ந்த சான்றோர்களையும் அறிந்து கொள்ள இயலாது. இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது:

அறுசீர் விருத்தம்

தண்டா மரையின் உடன்பிறந்தே
தண்டே னுகரா மண்டூகம்
வண்டே கானத் திடையிருந்து
வந்தே கமல மதுவுண்ணும்
பண்டே பழகி யிருந்தாலும்
அறியார் புல்லோர் நல்லோரைக்
கண்டே களித்தங் குறவாடித்
தம்மிற் கலப்பர் கற்றாரே.

**தெளிவுரை:** தவளை, தன்னருகிலேயே வளர்ந்து மணங் கமழ விளங்கும் தாமரை மலரின் தேனை நுகராது. ஆயினும் தொலை தூரத்தில் பூஞ்சோலையில் இருக்கும் வண்டு அப்பொய்கையை அடைந்து தாமரையில் மேவும் தேனை உண்டு சுவைத்து மகிழும். எவ்வளவு காலமாக உடன் இருந்தாலும் கல்வி யறிவில்லாதவர்கள் கற்றுணர்ந்த சான்றோர்களை அணுகிப் பயன் பெறமாட்டார்கள். ஆனால்

கற்றுணர்ந்த சான்றோர்கள் ஒருவருக்கொருவர் கலந்து அன்பு பாராட்டி மகிழ்ந்து விளங்குவார்கள்.

இத்தன்மையில் புலவர்கள் மகிழ்ந்து கூடி இருத்தலும் இனிது. இனி எப்போது மீண்டும் கூடுவோம் என்னும் ஆர்வத்துடன் பிரிந்து செல்லுதலும் ஆகிய பண்புடைமையையொட்டிச் சாற்றும்,

**"உவப்பத் தலை கூடிஉள்ளப் பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்"** **(குறள் 394)**

என்னும் திருக்குறளையும் காண்க.

மண்டூகம் – தவளை, கமலம் – தாமரை.

## 24. புத்தியுள்ளவனே பலமுள்ளவன்

**பாடற்குறிப்பு:** இளைய ராணி ஒருத்தி, தன் தம்பியை அமைச்சராக்குமாறு மன்னனை வற்புறுத்தி வந்தாள். அப்போது ஒரு மூத்த அமைச்சர் தனது வயது முதிர்ச்சியின் காரணமாக ஓய்வு பெற்றுக்கொள்ள விரும்பினார். அவருடைய புதல்வன் அறிவுக் கூர்மை யுடையவன். அவனைத் தனக்கு அமைச்சராக்கிக் கொண்டால் நன்மையாக இருக்குமே எனக் கருதினான் மன்னன். இளைய ராணியின் வற்புறுத்தலையும் ஒதுக்கும் ஆற்றல் அம்மன்னனுக்கு இல்லை. இந்நிலையில் அவ்வரசன் இளைய ராணியின் தம்பியிடம் முத்திரையிட்ட ஒரு பேழையைக் கொடுத்து வடபுலத்தில் உள்ள அண்டை நாட்டு மன்னன் பால் சேர்க்குமாறு அனுப்பினான். வடபுலத்தின் மன்னன் இவ்வேந்தனின் இனிய நண்பன். தூது சென்ற இராணியின் தம்பி அரசன்

அளித்த பேழையை வடபுல மன்னனிடம் கொடுத்தான். அதை எடுத்துப் பார்த்ததும் மன்னனுக்குச் சினம் பெருகியது. அப்பேழையில் சில மயிர் முடியும் சாம்பலும் இருந்தது. இதையறிந்த இளைய ராணியின் தம்பி தன்னை நன்றாகப் பழி வாங்கி விட்டான் அவ்வரசன் எனக் கூறி அந்த நாட்டு மன்னனிடம் போர் தொடுத்து வெற்றி பெற உதவுவதாகவும் கூறினான்.

இதே போன்ற ஒரு பேழையை எடுத்துச் சென்ற அமைச்சர் மகன் கிழக்குப் புலத்தில் உள்ள பக்கத்து நாட்டு அரசன்பால் அணுகித் தன்னுடைய நாட்டு மன்னன் முத்திரையிட்ட பரிசு ஒன்று அளித்துள்ள தாகத் தெரிவித்தான். மன்னன் முன்னிலையில் திறக்கப் பெற்ற அப்பேழையில் மயிர் முடியும் சாம்பலும் இருந்ததைக் கண்டு அனைவரும் வியந்தனர். அந்த நேரத்தில் அமைச்சரின் புதல்வன், "எங்கள் நாட்டு மன்னர் தங்கள்பால் கொண்டுள்ள நட்பின் பெருமை தான் என்னே! அஸ்வமேத யாகம் செய்து பெறப்பட்ட சிறந்த பயனை தங்களுடன் பகிர்ந்து கொள்ளவேண்டும் என்னும் எண்ணத்தில் இவ்வரிய பொருளைப் பரிசாக முத்திரையிட்ட பேழையில் அனுப்பியுள்ளார் என்றான். இதைக் கேட்ட அனைவரும் பாராட்டி அவ்வரசனை நேரில் காணவேண்டும் எனப் புறப்பட்டனர்.

வடபுலத்து வேந்தனும் கிழ்ப்புலத்து வேந்தனும் ஓரிடத்தில் சந்திக்கின்ற போது அமைச்சரின் புதல்வன் தன் வாக்கு வன்மையால் பகைமையைத் தீர்த்து வைத்தான். இச் செய்திகளை ஒற்றர் மூலம் அறிந்த

*அந்நாட்டு மன்னனும் இரு திறத்து மன்னர்களையும் வரவேற்று நட்புப் பாராட்டி உபசரித்தான்.*

*காட்டில் வாழ்ந்த முயல் ஒன்று, கொடுமை செய்த சிங்கத்தைக் கிணற்று நீரில் பிரதிபலித்த அதன் உருவத்தைக் காட்டி மாய்க்கவில்லையா? திருவள்ளுவர்,*

**"அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்"** **(குறள் – 427)**

*எனச் சாற்றுவதையும் காண்க. இத்தன்மையில் எழுந்த பாடல் இது.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**புத்திமான் பலவா னாவான்**
**பலமுளான் புத்தி யற்றால்**
**எத்தனை விதத்தி லேனும்**
**இடரது வந்தே தீரும்**
**மற்றொரு சிங்கந் தன்னை**
**குறுமுயல் கூட்டிச் சென்றே**
**உற்றதோர் கிணற்றிற் சாயல்**
**காட்டிய உவமை போலாம்.**

**தெளிவுரை:** *புத்தியுள்ளவன் பலமுடையவனாவான் புத்தி சாதுரியம் இல்லை என்றால் எந்த வகையிலும் இடர் கண்டு துன்பப் படநேரிடும். காட்டில் கொடுமை செய்து வந்த அறிவற்ற சிங்கம் ஒன்று தன்னுடைய நிழலைக் கிணற்று நீரில் காணுமாறு செய்வித்து மடியச் செய்த புத்தியுள்ள முயலின் கதையைக் கேட்டதில்லையா!*

## V. செல்வம்

**25. செல்வம் உள்ள போது சார்ந்து சிறப்பித்தலும் இல்லாதபோது நீங்குதலும் இயல்பு.**

பாடற்குறிப்பு: காட்டில் ஒருவன் விறகு வெட்டி விற்பனை செய்து தன் மனைவியுடன் வாழ்க்கை நடத்தி வந்தான். ஒரு நாள் விறகு வெட்டிக் கொண்டிருந்த போது மரத்தின் அடியில் பொற் காசுகள் புதையலாக இருந்தன. அவற்றைத் தன் வீட்டுக்குக் கொண்டு வந்து இனிது வாழ்ந்திருந்தான். இவன் செல்வச் செழிப்புடன் வாழ்வதையறிந்த இவனுடைய உறவினர்கள் பலர் இவனை நாடி வந்தனர். விறகு வெட்டி அவர்களையும் தன் குடும்பத்தின் உறுப்பினர்களாகக் கொண்டு வாழ்ந்து வந்தான். "செல்வர்க்கழகு செழுங்கிளை தாங்குதல்" என்னும் நெறியில் வாழந்தான்.

அவனிடமிருந்த பொற்காசுகள் நாளடைவில் கரையத் தொடங்கின. அவன் அக்காசுகளைக் கொண்டு மேன்மையடையும் தன்மையில் வாணிபமும் செய்யவில்லை. தனக்கேற்ற உழைப்பையும் செய்யவில்லை. மீண்டும் வறியவனா னான். அவனை நாடிவந்த உறவினர்களும் அவனை விட்டு நீங்கினர்.

மரம் பழுத்திருந்த காலத்தில் பறவைகள் தாமே வந்து சேர்தலும், இலைகள் உதிர்ந்து காய்ந்த காலத்தில் அப்பறவைகள் நாடாது விலகி இருத்தலும் இயற்கை யல்லவா! இத்தன்மையை எண்ணிய புலவர் ஒருவரின் பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஆலிலை பூவும் காயும்
இனிதரு பழமும் உண்டேல்
சாலவே பட்சி யெல்லாம்
தன்குடி யென்றே வாழும்
வாலிபர் வந்து தேடி
வந்திப்பார் கோடா கோடி
ஆலிலை யாதி போனால்
அங்குவந் திருப்பார் உண்டோ

தெளிவுரை: ஆலமரத்தில் இலை பூ காய் பழம் என யாவும் இருக்குமானால் பறவைகளெல்லாம் அதனைத் தமது வீடாகக் கருதி இனிது வாழும். அதைப் போன்று செல்வம் உற்ற காலை உறவினர்கள் பலரும் வந்து இருந்து நலம் பாராட்டுதலும் இயல்பு. செல்வம் குறைவடைந்து வறுமையுற்ற நிலையில் உறவினர்கள் விலகிச் செல்வர் என்பதும் இவண் உருவகிக்கப் பட்டது.

26. செல்வந்தரைத் தமது சுற்றத்தினர் என ஏத்திப் புகழ்தலும் வறியவரைப் பாராமுகமாக மேவுதலும் இயல்பு:

பாடற்குறிப்பு: ஒரு கிராமத்தில் சிறுவன் ஒருவன் பலரிடமும் விவாதம் செய்வதும் அவமதிப்பாக நடந்து கொள்வதுமாக இருந்தான். அவனுடைய செயலைக் கண்டு வெறுத்த சிலர் அவனை ஒதுக்கி வைத்திருந்தனர். இந்நிலையில் சில ஆண்டுகள் அவன் வெளியூர் சென்று வாணிபம் செய்து திரண்ட பொருட்களுடன் தன்னுடைய கிராமத்திற்கு வந்தான்.

பெரியவர்கள் பலர்க்கும் தகுந்த சன்மானங்களையும் பரிசுப் பொருட்களையும் கொடுத்தான். அவற்றைப் பெற்றுக்கொண்ட ஊர் மக்கள் அவனை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினர். பெரு மதிப்பினையும் அளித்தனர்.

அதே ஊரில் ஒரு தன்வந்தர் இருந்தார். அவர் கப்பலில் சென்று வாணிபம் நடத்தி வந்தார். தமது வருவாயில் அவ்வூரின் நன்மைக்காகக் கிணறு நடுதல் ஆலய விழாக்கள் செய்தல், கல்விக்கான வசதி யளித்தல், நோயாளிகளுக்கு மருத்துவ உதவி செய்தல் முதலானவற்றைப் புரிந்து வந்தார். அவருக்கு வாணிபத்தில் இழப்பு ஏற்பட்டமையால் அவர் தமது உதவிகளை நிறுத்திவிட்டார். இதுவரை பாராட்டி வந்த மக்கள் அது முதல் பாராமுகமாக இருந்து விட்டனர். இதனைக் கண்ட புலவர் ஒருவரின் பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

பொன்னொடு மணியுண் டானால்
புலையனும் கிளைஞன் என்று
தன்னையும் புகழ்ந்து கொண்டு
சாதியின் மணமும் செய்வார்
மன்னராய் இருந்த பேர்கள்
வகைகெட்டுப் போவா ராகில்
பின்னையும் ஆரோ வென்று
பேசுவார் ஏசு வாரே.

தெளிவுரை: கீழ் மகன் ஒருவன் பொன்னும் மணியும் பெற்றுச் செல்வச் செழிப்புடன் விளங்குபவனாயின்,

அவனை எல்லோரும் புகழ்ந்து பாராட்டுவார்கள். அவனுக்குத் தகுந்த சிறப்பும் செய்வார்கள். ஒரு காலத்தில் மன்னனுக்குச் சமமாக விளங்கி நன்மைகள் பல செய்தவரானாலும், அவர்கள் தமது நிலை கெட்டுத் தாழ்ந்து போவார்களானால் அவர்களைப் பொருட்படுத்த மாட்டார்கள். பலவாறு பேசி நிந்தனையும் செய்வார்கள்.

இப்பாடற்கருத்தினை

**"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு"** **(குறள் 752)**

எனவும்,

**"தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையின் இழிந்தக் கடை"** **(குறள் 964)**

எனவும் சாற்றும் பாடல்களாலும் காண்க.

## 27. பொருளற்றவர் பிணத்திற்குச் சமம்

**பாடற்குறிப்பு:** கையில் பொருள் இல்லாத வறியவன் ஒருவன் செல்வந்தர் வீட்டுத் திருமணத்தைக் கண்டும் திருமண விருந்தை உண்டும் மகிழ விரும்பினான். அவனுடைய கோலத்தைக் கண்டு அவனைத் திருமண அரங்கில் நுழைய விடவில்லை. அவனைச் சற்றும் மதிக்காதவராய் ஆங்கிருந்தவர்கள் அவனை வெளியேற்றினர். அவ்வறியவன் செல்கின்ற போது வழியில் ஒரு கோயிலின் வெளியே உண்டியல் ஒன்று கட்டி வைக்கப்பட்டிருந்தது. அவன் நினைத்தாலும் அவ்வுண்டியில் காசு ஒன்று இடுவதற்கும் அவனிடம் இல்லை. அவன் சிறு புதல்வன் ஒருவன் ஏனைய தன்

வயதுடைய சிறுவர்களுடன் சேர்ந்து விளையாட வேண்டும் என்று எண்ணினான். ஆனால் அச்சிறுவர்கள் இச்சிறுவனின் ஏழ்மை நிலையைக் கருதித் தம்முடன் சேர்த்துக்கொள்ளவில்லை. எனவே அவ்வேழை தான் ஏதேனும் திருத்தலத்திற்குச் சென்று புண்ணியத்தைத் தேடினால் பயனுண்டாகும் எனக் கருதிக் காசிக்குச் சென்று கங்கையில் புனித நீராடலாம் எனத் தீர்மானித்தான். காசிக்குப் பயணம் செய்யவும் பணம் தேவைப்பட்டதால் அப்புண்ணியத் தையும் அவன் பெறமுடிய.வில்லை. அவன் நடை பிணமாகவே திரிகிறான். இத்தன்மையில் திருவள்ளுவர் சாற்றிய

**"இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை**
**எல்லாரும் செய்வர் சிறப்பு"** **(குறள் 752)**

என்னும் திருக்குறள் கருத்தையும் எண்ணிப் பார்த்த புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.



**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**பொருளிலார்க் கின்பம் இல்லை**
**புண்ணியம் இல்லை என்றும்**
**மருவிய கீர்த்தி யில்லை**
**மைந்தரிற் பெருமை யில்லை**
**கருதிய தரும மில்லை**
**கதிபெற வழியுமில்லை**
**பெருநிலந் தனிற்சஞ் சாரப்**
**பிரேதமாய்த் திரிகு வாரே.**

**தெளிவுரை:** கையில் பொருளில்லாத ஏழைக்கு மகிழ்ச்சி யில்லை; புண்ணியச் செயல்களையும் செய்ய

முடியாது. பெருமையில்லை; தான தருமங்கள் செய்து மறு பிறப்பிற்குரிய நன்மைகளையும் பெற முடியாது. அவனுக்கு மட்டுமல்லாது அவனது புதல்வர்களுக்கும் பெருமையுண்டாகாது. இவ்வுலகத்தில் அத்தகைய ஏழைகள் நடைப்பிணம் போலத் திரிபவராவார்கள்.

பெரு நிலம் – உலகம்.

## VI. புகழ்

**28. தன்மானம் மிக்கவர் கவரிமானைப் போன்று உயிரை விட்டுப் புகழ் பெறுவர்.**

**பாடற்குறிப்பு:** கோவலனைக் கள்வன் எனக் கருதிக் கொலைக் களத்தில் தண்டனையளித்த பாண்டியன் நெடுஞ்செழியன் தான் செய்தது தவறு என உணர்ந்தான். நீதிநெறியைத் துறந்து ஒரு நிரபராதியைத் தண்டித்தது குற்றம் எனக் கண்டான். தன் செயலால் பாண்டிய வம்சத்தின் மானமே போய் விட்டதாகக் கருதினான். இத்தன்மையில் அதற்குப் பரிகாரமாகச் செய்யத்தக்கது தன்னுயிரைத் துறத்தல் ஒன்றே யாதலை யுணர்ந்தான். அக்கணமே அவன் உயிர் பிரிந்தது.

மாங்கனியொன்று மரத்திலிருந்து கீழே விழுந்து காவிரி நீரில் அடித்துச் செல்ல, பெண்மணி ஒருத்தி அதனை எடுத்து அருந்தினாள்.. அந்த மாங்கனி நன்னன் என்னும் மன்னனின் தோட்டத்தில் இருந்ததாகும். தான் விரும்பிய அக்கனியை உண்ணாமையால், கனியுண்ட கன்னியைக் கொலை புரிந்தான் நன்னன். "பெண் கொலை புரிந்த நன்னன்"

எனத் தமிழ் மக்கள் அவனைப் பழித்தனர். இத்தகைய வரும் உலகில் உளரோ! இவ்வாறு சிந்தித்தார் ஒரு தமிழ்ப்புலவர். அது ஒரு பாடலாக மலர்ந்தது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

மானமுள் ளோர்கள் தன்னோர்
மயிர்அறின் உயிர்வா ழாத
கானுறு கவரிமான் போல்
கனம்பெறு புகழே பூண்பார்
மானமொன் றில்லார் தாமும்
மழுங்கலாய்ச் சவங்க ளாக
ஈனமாங் கழுதைக் கொப்பாய்
இருப்பரென்(று) உரைக்க லாமே.

**தெளிவுரை:** *தனது உடலில் உள்ள ஒரு மயிர் அறுந்து விழுந்தாலும் உயிர் துறந்து மானத்தைக் காப்பது கவரிமான். அத்தகைய குணம் உடைய சீலர்கள் தனது மானம் போகுமானால் உயிர் விடுவார்கள். அவ்வாறு இன்றி மானத்தைப் பெரிதாக நினைக்காதவர்கள் நடைப் பிணங்களாகவும் கீழ்மையுடைய விலங்கான கழுதைக்கு ஒப்பாகவும் சிறுமைகளையும் அவமானங்களையும் தமது தேகத்தில் சுமந்து இருப்பவர்களாவார்கள்.*

*இத்தன்மையில் மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் உயிர் நீப்பர் மானம் வரின்" என்று சாற்றும் திருக்குறளையும் காண்க.*

## 29. ஆசார சீலத்தால் மேவும் புகழ்

**பாடற்குறிப்பு:** வேடன் ஒருவன் கானகத்தில் இருந்து கொண்டு வழிப்போக்கர்களைத் துன்புறுத்திப்

பொருள்களைக் கவர்ந்து வாழ்க்கை நடத்தி வந்தான். இவ்வாறு கவர்ந்த பொருள்களை ஒரு சமயம் அவனால் தூக்கிச்செல்ல முடியாததாயிற்று. அப்போது அப்பொருளை இழந்து வருந்திக் கொண்டிருந்த ஒருவரை ஆணையிட்டு அச்சுமையைக் கொடுத்து எடுக்கச் சொன்னான். அவ்வழிப் போக்கன் இந்தச் சுமையைத் தூக்குவதற்குக் கை கொடுத்தாலும் அவன் பாவமூட்டையை அவனே தான் சுமக்க வேண்டும் என்றான். இச்சொல்லானது அவ்வேடனைச் சிந்திக்க வைத்தது. கவர்ந்த பொருள்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டுப் பாவ மூட்டையைச் சுமக்காமல் இருப்பதற்கு வழி சொல்லுமாறு வினவினான். அவனுக்கு வழியில் இருந்த ஒரு விநாயகர் கோயிலைக் காட்டி அங்குச் சென்றால் அதனைத் தெரிந்து கொள்ளலாம் எனக் கூறி அவ்வழிப்போக்கன் தப்பித்துச் சென்றார்.

விநாயகரைக் கண்ட வேடன் அங்கேயே ஒரு நாள் முழுதும் இருந்து தரிசிப்பவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தான். மறுநாள் தூய நீராடித் திருவெண்ணீறணிந்து விநாயகரைத் தரிசித்துக் காட்டில் இருக்கும் கனி வகைகளையே உண்டான். ஒருவேளை கனியுணவும் விநாயக வழிபாடும் அவனுக்கு நித்தியப் பணியாகிவிட்டது. அவனைக் கண்ட அனைவரும் சாது சுவாமி எனப் போற்றிப் பாராட்டினர். ஒழுக்கமற்ற வேடனாக இருந்த ஒருவன் சாதுசுவாமியான விந்தையைக் கண்ட புலவர் ஒருவரின் பாடல் இது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஆசாரம் செய்வா ராகில்
அறிவொடு புகழும் உண்டாம்
ஆசாரம் நன்மை யானால்
அவனியில் தேவர் ஆவார்
ஆசாரம் செய்யா ராகில்
அறிவொடு புகழும் அற்றுப்
பேசார்போல் பேச்சும் ஆகிப்
பிணியொடு நரகில் வீழ்வார்.

**தெளிவுரை:** *ஆசார சீலத்தோடு தெய்வ வழிபாடு செய்பவர்கள் புகழ் பெறுவார்கள். உலகத்தில் நன்மையைப் புரிபவர்களாகித் தேவர்களுக்கு ஒப்ப விளங்குவார்கள். அவ்வாறு இல்லாத புல்லறிவுடையவர்கள் புகழ் இல்லாதவர்களாய் நோயும் பாவமும் உடையவர்களாய் நரகத்தில் விழுவார்கள்.*

ஆசாரம் – தெய்வ வழிபாட்டுடன் கூடிய நல்லொழுக்க நெறி.

## 30. குலமானம் காத்தலின் பெருமை

பாடற்குறிப்பு: *இராவணனால் தூற்றப்பட்ட விபீடணன் இராமபிரானைச் சரணடைந்தான். எதிரியின் பாசறையிலிருந்து வந்த இவனை, இராம பிரானைச் சூழ்ந்துள்ள அனைவரும் ஏற்றுக் கொள்ளலாகாது எனக் கூறினர். சரணம் என்று வந்தவர்களைக் காவானாகில் தனது மானமும் தன் குலத்தின் பெருமையும் சீர்குலையும் எனக் கருதினார் ஸ்ரீராமன். மேலும் தன்னை நம்பி வந்த விபீடணனின் மானமும் சிதைவுறும். எனவே அடைக்கலம் கொடுத்தலே ஏற்புடையது என இராமபிரான் முடிவு*

செய்தார். இத்தன்மையினர் தான் வள்ளலாக விளங்கக் கூடியவராவர். இச்செயலை எண்ணிப் பாடிய புலவர் ஒருவரின் பாடல் இது.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**தன்மானம் குலமானம் தன்னைவந்(து)**
**அடைந்தவுயிர் தங்கள் மானம்**
**என்மான மாகிலென்ன வெல்லவருஞ்**
**சரியெனவே எண்ணம் போந்து**
**தன்மானம் வைத்தெந்த நாளுமவர்**
**தங்களுக்கு நன்மை செய்வோர்**
**மன்மானி யடைந்தோரைக் காக்கின்ற**
**வள்ளலென வழுத்த லாமே.**

**தெளிவுரை:** தனது மானமும் குலத்தின் மானமும் தன்னை நாடி வந்தவர்களின் மானமும் காக்கும் தன்மையில் தன்னை நாடிச் சரணம் அடைந்தவர்களைக் காக்கவேண்டும். தன்னுடைய உயிரைப் போலவே, தன்னை அடைக்கலமாக அடைந்தவர்களையும் கருதிக் காப்பாற்ற வேண்டும். அவ்வாறு செய்பவரே மெய்யான வள்ளல் எனக் கூறிப் போற்றலாம்.

## 31. புகழுடம்பு எக்காலத்திலும் அழியாது.

**பாடற்குறிப்பு:** ஓர் ஊரில் சித்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் அங்குள்ள சிறுவர்களுக்குப் பாடங்களைச் சொல்லிக் கொடுத்துச் சிறந்த கல்விமான்களாக்கி வந்தார். பெரியவர்களுக்கு நீதி போதனைகளைச் செய்தும், மந்திர உபதேசங்களைப் புரிந்தும் வந்தார். நோயுற்றவர்களுக்கு மருந்து

கொடுத்துப் பிணி தீர்த்து வந்தார். இளைஞர்கள் உழைத்து லாபம் பெருக்கும் விதத்தில் செயலாற்றியும் வந்தார். அந்த ஊர் மக்கள் மட்டும் அன்றி அண்மையில் உள்ள ஊர் மக்களும் பெருமையுடனும் நலமுடனும் திகழ்வதற்கு அச்சித்தர் காரணமாக இருந்தார். மக்களெல்லாரும் அவரைத் தெய்வத்தின் திரு அவதாரமாகக் கருதினர். பன்னாட்கள் இவ்வாறு தொண்டாற்றிய அச்சித்தரின் உயிர் அவருடைய பூத சரீரத்திலிருந்து ஒரு நாள் விடுபட்டுச் சென்றது. அவருடைய அன்பில் தோய்ந்த அவ்வூர் மக்கள் அவரைப் போன்ற சிலையை அமைத்து அவற்றுக்கு வழிபாடு செய்து மகிழ்ந்தனர். அவர் உபதேசித்தவாறு அவரவர்களும் தமது கடமையை ஆற்றினர். அவருடைய புகழ் அழியாது நிலைத்திருந்தது. இதைக் கண்டு வியந்த புலவர் ஒருவரின் பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஒருவனே இரண்டு யாக்கை
　　ஊன் பொதி யான நாற்றம்
உருவமும் புகழும் ஆகும்
　　அதற்குள் நீ இன்ப முற்று
மருவிய யாக்கை யிங்கே
　　மாய்ந்திடும் மற்றி யாக்கை
திறமதாய் உலகம் ஏத்தச்
　　சிறந்துமின் னிற்கு மன்றே.

தெளிவுரை: ஒரு மனிதனுக்கு ஊன் உடம்புடன் கூடிய நாற்றம் உடைய தேகம் உண்டு. அழகிய வடிவம் கொண்டு மேவும் புகழ் என்பதும் ஒரு தேகம் ஆகும்.

ஊன் கொண்டு மேவும் நாற்றமுடைய உடம்பு நிலையற்றதாகி அழியாது. நிலை பெற்று நிற்கக் கூடியதாகும். இத்தகைய புகழுடையவர்களை உலக மக்கள் சிறப்புடன் போற்றுவார்கள்.

இந்நெறியில்,

**"ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்**
**பொன்றாது நிற்பதொன்று இல்"** **(குறள் 233)**

என்ச்சாற்றும் திருக்குறளையும் காண்க.

## VII. நற்செய்கை

### 32. மாதம் மூன்று மழை பொழியும் சிறப்பு.

**பாடற்குறிப்பு:** நாட்டில் மழை வளம் குறைந்தால் செழுமை குறையும். "மழைவளம் கரப்பின் வான் பேர் அச்சம்" என்பது சேரன் செங்குட்டுவன் வாயிலாக இளங்கோவடிகளும் பகர்ந்துள்ளார். இத்தகைய வான் சிறப்பு என்னும் மழையாகிய அமிர்தம் நன்கு பெருக வேண்டுமால் மாதம் மூன்று மாரி பொழிதல் வேண்டும். இத்தகைய மழை பொழிதல் வேதம் ஓதும் ஆசாரமிக்க வேதியர்களின் சிறப்பாலும் நாடாளும் மன்னர்களின் நீதிபரிபாலனத்தாலும், கற்புடைய மாதரசிகளின் மாண்பினாலும் நடைபெறும். மழை பொழிதலால் நாடு வளம் பெறும். இக்கருத்தினை யொட்டி எழுந்த பாடல் இது.

**கலி விருத்தம்**

**வேதம் ஓதிய வேதியர்க் கோர்மழை**
**நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை**

**மாதர் கற்புடை மங்கையர்க் கோர்மழை**
**மாத மூன்று மழையெனப் பெய்யுமே.**

**தெளிவுரை:** *ஆசார சீலம் கொண்டு வேதம் ஓதும் வேதியரின் சிறப்பைக் காட்டுவதற்கு ஒரு மழையும், நாடாளும் மன்னனின் நீதி நெறியைப் பாராட்டும் வகையில் ஒரு மழையும், கற்புடைய மாதர்களின் மாண்பினை யொட்டி ஒரு மழையும் என மாதம் மூன்று மழை உலகத்தில் பெய்து வளமையைத் தருவதாகும். இம்மழையினால் தீங்கு ஏதும் இன்றி நன்மையே விளையும் என்பதும் குறிப்பு.*

## 33. வருடத்திற்கு மூன்று மழை

**பாடற்குறிப்பு:** *மாதத்திற்கு மூன்று மழை பொழிவது நாட்டிற்கு வளத்தைத் தரும். அத்தகைய பெருமை வாய்க்காது நீங்கினால், நாட்டில் பாவச் செயல் மேலோங்கியுள்ளது என்பதே பொருள். அந்தணர்கள் வேதங்களை ஓதி அரசர்களாலும் ஏனையோர்களா லும் சன்மானங்களைப் பெற்று மகிழும் நிலையிலிருந்து மாறி உணவு விற்றுப் பிழைப்பு நடத்துபவரானாலும், நீதி பரிபாலனம் முறையாகச் செய்யாது மன்னர்கள் நாட்டை ஆள்பவரானாலும் கணவனை மதியாத மங்கையர் மலிந்திடுதலாலும் ஆண்டுக்கு மூன்று முறையே மழை பொழியும். இதனை விளக்கும் வகையில் எழுந்த பாடல் இது.*

### கலி விருத்தம்

**அரிசி விற்றிடும் அந்தணர்க் கோர்மழை**
**வரிசை தப்பிய மன்னருக் கோர்மழை**

புருஷனைக் கொன்ற பூவையர்க் கோர்மழை
வருஷ மூன்று மழையெனப் பெய்யுமே.

**தெளிவுரை:** உணவை விற்றுச் சீவனம் செய்யும் அந்தணர்களும், நீதிபரிபாலனம் முறையாகச் செய்யாத மன்னர்களும் கணவரின் கருத்துக்கு மாறாக நடக்கும் மங்கையரும் ஆகியவர்கள் பெருகினால் மாதம் மும்மாரி என்னும் வலிமை கெட்டு வருடத்துக்கு மும்மாரி பெய்யும் என்பதாகும். இது நாட்டின் பஞ்சத்தையும், வறட்சியையும் எதிரொலிக்கும்.

பூவையர் – மங்கையர்.

## 34. தருமம் செய்தலே உயிர்க்குத் துணையாகும்.

**பாடற்குறிப்பு:** ஈட்டுகின்ற பொருளை வேறு ஒருவர்க்கு உதவி செய்யாது தானே பயன்படுத்திக் கொண்டு ஒருவர் இருப்பாரானால் அவரது தேகம் வலிமை பெறும். பொது மகளிர் பால் செலவிட்டு இன்பம் துய்த்தால் உடற்பிணி நேரும். உறவினர்களுக்குக் கொடுத்துதவினாலும் மனம் மயங்கி வாடும். ஏழை எளியர்க்கும் தெய்வத்திற்கும் செய்யும் தருமம் உயிர்க்குத் துணையாக இருந்து, நற்பயனை நல்கும். இந்நிலையில் எழுந்தது இப்பாடல்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

தன்னுடலி னுக்கொன் றீந்தால்
    தக்கதோர் பலம தாகும்
மின்னியல் வேசிக் கீந்தால்
    மெய்யிலே வியாதி யாகும்

மன்னிய உறவுக் கீந்தால்
வருவது மயக்க மாகும்
அன்னிய பரத்துக் கீந்தால்
ஆருயிர்க் குதவி யாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறு காண்க.

## 35. அறிவுடைய பெருமக்களை அனைவரும் ஏத்துவர்.

பாடற்குறிப்பு: அறிவு சார்ந்த பெருமக்களை மன்னர்கள் சார்ந்து அவர் தம் சொற்களை ஏற்று அவ்வண்ணமே செய்து இனிது வாழ்வார்கள். அரசர்களைப் போன்று நாட்டில் உள்ள ஏனைய மக்களும் இனிது அன்பு செலுத்துபவர்களாய் ஏத்தி வணங்கி மகிழ்வார்கள். அவ்வாறு சிறப்புடன் பாராட்டப்படும் அச்சான்றோர் களுக்கு வறுமை நேருமானாலும் உலகத்தவர் நிந்தனை செய்யமாட்டார்கள். இகழ்ச்சியாகவும் கருத மாட்டார்கள். இத்தகைய சிறப்பினை இப்பாடல் இயம்புகிறது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

அறிவுளோர் தமக்கு நாளும்
அரசருந் தொழுது வாழ்வார்
நிறையொடு புவியிலுள் ளோர்
நேசமாய் வணக்கம் செய்வார்
அறிவுளோர் தமக்கு யாதோர்
அசடது வருமே யாகில்
வெறியரென் றிகழா ரென்றும்
மேதினி யுள்ளோர் தாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் நோக்குக.

அசடு – இழுக்கு. குறைவு, வறுமை.

## 36. மறைபொருளாகக் கொள்ளவேண்டியவற்றை உரைத்தல்:

பாடற்குறிப்பு: சற்குருவானவர் தனக்குச் செய்த உபதேசத்தை ஒருவன் வெளியே சொல்லாது மறை பொருளாககக் கொள்ளவேண்டும். அதே போன்று மாதர்பால் நண்ணி அடைந்த இன்பத்தையும் வெளியிடுதல் கூடாது. மற்றும் தன்னிடம் விளங்கும் நீதிகளையும், கல்வியின் பெருமையையும், தான் செய்த தருமங்களையும், தான் பெற்றுள்ள மந்திரங்களின் மகிமைகளையும், தனது ஆண்மை நிலையையும், தனது உண்மையான வயதையும் ஒருவருக்கும் வெளியிட லாகாது. அவ்வாறு ஒருவன் வெளியிடுவானாயின் அத் மதிப்புக் குறைந்து விடும். இதனை விளக்கும் வகையில் இப்பாடல் எழுந்தது.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

குருவுப தேசம் மாதர்
கூடிய இன்பம் தன்பால்
மருவிய நியாயம் கல்வி
வயதுதான் செய்த தன்மம்
அரியமந் திரம்வி சாரம்
ஆண்மையிங் கிவைக ளெல்லாம்
ஒருவருந் தெரிய வொண்ணா(து)
உரைத்திடில் அழிந்து போமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

**37. தருமம் செய்பவர்களைத் தடுப்பவர்களுக்கு எல்லாத் துன்பங்களும் வரும்.**

பாடற்குறிப்பு: *சான்றோர் ஒருவர் நல்லுபதேசம் செய்து கொண்டிருந்தார். தருமம் செய்தல் மேன்மையுடையது. மற்றும் அதுவே உயிர் காக்கும் பெருந்துணையாகும் என்றார். அவர் மேலும் கூறுகையில் ஒருவன் தருமத்தைச் செய்யாதவனானாலும் தருமம் செய்பவனைத் தடுப்பதும் அச்செயலைப் புரியவிடாது இடையூறு செய்வதும் பொறாமைப்படுவதும் பெரும் துன்பத்தையுண்டாக்கிவிடும். அவன் மட்டுமல்லாது அவன் சுற்றத்தாரும் உண்ண உணவும், உடுக்க உடையும் இன்றி வாடுவார்கள். இதனை,*

**"கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்"** (குறள் 166)

*என்னும் திருக்குறளாலும் அறியலாம் என்று கூறினார். இந்நிலையில் எழுந்த பாடல் இது.*

**அறுசீரடி ஆசிரிய விருத்தம்**

**இடுக்கினால் வறுமை யாகி
ஏற்றவர்க் கிசைந்த செல்வம்
கொடுப்பது மிகவும் நன்றே
குற்றமே யின்றி வாழ்வார்
தடுத்ததை விலக்கி னோர்க்குத்
தக்க நோய் பிணிகளாகி
உடுக்கவே உடையு மின்றி
உண்ணுசோ றும்மெல்ல மாமே.**

**தெளிவுரை:** மனத் துயரமும் வறுமையும் உடையவர்களாய் யாசிப்பவர்களுக்குத் தேவையான செல்வத்தையும் வேறு தகுந்த உதவிகளையும் செய்வது மிகவும் நன்மையைத் தரும். அவ்வாறு உதவி செய்பவர்கள் குறைவற்ற செல்வத்தையுடையவர் களாய் இனிது வாழ்வார்கள். அவ்வாறு உதவி செய்பவர்களைத் தடுப்பவர்கள் நோய் உடையவர் களாகவும் உடல் முழுவதும் பிணி கொண்டவர் களாய், உடுக்க உடையும் இன்றித் துன்பத்தால் வருந்தி அல்லல் படுவார்கள். அவர்கள் உண்பதற்கு உணவு கிடைக்காது வெல்லம் போன்று அரிய பொருளாய் விளங்கும்.

**குறிப்பு:** இனிப்புச் சுவையுடைய வெல்லம் அரிய பொருளாக விளங்குவதைப் போல உண்ணும் உணவும் அரிதாகும் என இவண் உணர்த்தப் படுவதாம்.

இடுக்கி – துன்பம்.

**38. மெய் சொன்னால் நன்மையாகும். பொய் சொல்பவர்களுக்குப் போசனம் கிடைக்காது.**

**பாடற்குறிப்பு:** மெய் சொல்லும் உத்தமர்கள் பெருமை யுடன் விளங்குவார்கள்; இவ்வுலகத்தில் மேலும் பல நன்மைகளைப் பெறுவார்கள்; மற்றும் மனிதர்களினும் உயர்ந்தவர்களாகிய தேவர்களாவார்கள். பொய் பேசுகின்ற கீழோர் உண்பதற்குப் போசனம் கிடைக்காதவர்களாய்த் துன்பத்தில் உழல்வார்கள். நொய்யரிசி கொதி தாளாது குழைந்துவிடும் என்பதைப் போன்று இத்தகையவர்களிடம் பெருந் தன்மையைக் காணமுடியாது என்று கருதி., அறிவுடையவர்கள் போற்ற மாட்டார்கள்.

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மெய்யதைச் சொல்வா ராகில்
விளங்கிடும் மேலும் நன்மை
வையக மதனைக் கொள்வார்
மனிதரில் தேவர் ஆவார்
பொய்யதைச் சொல்வா ராகில்
போசனம் அற்பம் ஆகும்
நொய்யரி சியாகா தென்று
நோக்கிடார் அறிவுள் ளோரே.

குறிப்பு: இதன் பொருள், வெளிப்படை, பாடற் குறிப்பும் நோக்குக. "பொய் சொன்ன வாய்க்குப் போசனம் கிடைக்காது", "நொய்யரிசி கொதி தாளாது" என்னும் இரு பழமொழிகளும் இவண் உணர்த்தும் நீதியையும் காண்க.

போசனம் – நல்லுணவு.

**39. தீய குணம் உடையவர்கள் கல்வியறிவு பெற்றாலும் பிறர்க்குத் தீமையே செய்வார்கள்.**

பாடற்குறிப்பு: ஓர் ஊரில் கள்ளன் ஒருவன் இருந்தான். அவன் அறிவு கூர்மையுடையவன். சிறந்த பாதுகாப்பு நிறைந்த இடமாக இருந்தாலும் ஆங்குச் சென்று பொருள்களைக் களவு செய்து விடுவான். அங்கு ஒரு அறிஞர் இருந்தார். அவர் நூற்புலமை நன்கு உடையவர். அக்கள்வனுக்கு நீதி நூற்கருத்துக்களைப் புகட்டி அறிவுடையவனாக்கி விட்டால், அவன் ஏனையவர்களுக்கு உபகாரமாக இருப்பான் எனக் கருதினார். அக்கள்வனை அழைத்து அரிய நூற்கருத்துக்களைப் புகட்டி அறிவில் சிறந்தவனாக

ஆக்கினார். அக்கள்வன் நூல்களை நன்கு கற்றும் பணிவில்லாதவனாக இருந்தான். அவனிடம் நிறைந்த பொருட்செல்வம் இருந்தது. நூல்களின் உண்மைப் பொருளைத் திரித்துப் பலவாறு பேசினான். சான்றோர்களைத் தகாதமுறையில் அழைத்து வாதம் புரிந்து வன்மை பேசியும் பழித்தும் இழிவு செய்தான். அவனைக் கண்டு ஏனையோர் அஞ்சினர். இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**அறுசீரடி ஆசிரிய விருத்தம்**

**பொல்லார்க்குக் கல்விவரில் கர்வம் உண்டாம்**
**அதனோடு பொருளும் சேர்ந்தால்**
**சொல்லாதுஞ் சொல்லவைக்கும் சொற்சென்றால்**
**குடிகெடுக்கத் துணிவர் கண்டாய்**
**நல்லோர்க்கும் மூன்று குணம் உண்டாகில்**
**அருளதிக ஞானம் உண்டாம்**
**எல்லோர்க்கும் உபகார ராயிருந்து**
**பரகதியை எய்து வாரே.**

**தெளிவுரை:** தீய குணம் உடையவர்கள் கல்வியில் தேர்ச்சியுடையவராக இருந்தாலும் ஆணவம் மிகுந்தவராக இருப்பார்கள். அவர்களிடம் பொருட் செல்வமும் சேர்ந்தால், உண்மைப் பொருளையும் திரித்துக் கூறுவார்கள். பிறரிடம் வாதம் புரிந்து இழித்தும் பழித்தும் பேசுவார்கள். நல்லோர் குடும்பத்திற்குத் தீமையும் புரிவார்கள்; பின்னர் நரகிடை உழல்வார்கள்.

நற்குணம் உடையவர்களுக்குக் கல்வியறிவும் பொருட்செல்வமும், சொல்லாற்றல் மிக்கு வாதிடும் திறனும் ஆகிய இம்மூன்று நிலைகளும் வாய்க்கப்

பெற்றால் உலகோர்க்கு அருள் வழங்கும் நற் செய்கையும் உபகாரம் செய்யும் கருணைப்பாங்கும் உண்டாகும். அவர்கள் மெய்ஞ்ஞான நிலையைப் பெற்றுப் பேரின்பத்தில் திளைத்தவர்களாகி இவ்வுலகில் இனிது வாழ்ந்து மறுமையில் பரகதியை அடைவார்கள்.

**40. பெரியோர்கள், கீழ்மக்களின் குற்றங்களைப் பாராட்ட மாட்டார்கள்:**

**பாடற்குறிப்பு:** *அழுக்கு முதலான கழிவு நீர் கடலில் சேர்ந்தாலும், கடலானது அதனை நற்குலமாகக் கருதி ஏற்றுக்கொள்ளுமேயன்றி வெறுத்து ஒதுக்குவதில்லை. அதைப் போன்று சான்றாண்மை மிக்க புலவர்கள் விளங்குகின்ற சபையில் குறை மதியும் புன்மையும் உள்ள கவிவாணர்கள் சார்ந்து ஏதேனும் கருத்துக்களைக் கூறுவார்களாயினும் பெரியோர்கள் நலமென்றே கருதும் பண்புடையவர்களாகத் திகழ்வார்களேயன்றி அவற்றில் காணப்பெறும் குற்றங் களைப் பெரிதாக எண்ணமாட்டார்கள். இது பெருமக்களின் இயல்பு.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

சலதாரை வீழு நீரும்
சாகரந் தன்னைச் சார்ந்தால்
குலமென்றே கொள்வ தல்லால்
குரைகடல் வெறுத்த துண்டோ
புலவர்கள் சபையில் கூடிப்
புன்கவி யாளர் சார்ந்தால்
நலமென்றே கொள்வ தல்லால்
நவில்வரோ பெரியோர் குற்றம்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

சாகரம் – கடல்.

## VIII. சுகம்

### 41. செவிக்கினிய சொல்:

பாடற்குறிப்பு: வீரத்தின் சிகரமாக விளங்கும் வீரர்கள் போர்க்களத்தில் ஒருவருக்கொருவர் மோதிக் கொண்டு ஒருவரையொருவர் நிந்தனை செய்தல் அவர்கள் செவிக்கு இன்பம் தரும் சொற்களாகும். மழலைச் சொற்களால் குழந்தைகள் வைதாலும் பேசினாலும் செவிக்கு இன்பத்தை விளைவிக்கும். மன்மதலீலா விநோதத்தால் மங்கையர்கள் கூறும் புன் சொற்களும் இனிமை பயப்பதாகும். இந்நிலையில் எழுந்தது இப்பாடல்.

கலி விருத்தம்

கதலி வீரர் களத்திடை வையினும்
மதலை வாயிற் குழவிகள் வையினும்
மதன லீலையின் மங்கையர் வையினும்
இதமு றச்செவிக்(கு) இன்பம் விளையுமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

மதலை வாயிற் குழவிகள் – குழந்தையின் மழலைச் சொற்கள்.

### 42. இப்பிறவியின் சொர்க்கமாகத் திகழ்வது

பாடற்குறிப்பு: இவ்வுலகத்தில் இனிமையாக வாழ்வது இகலோகச் சொர்க்க வாழ்வு எனக் கருதப்படும்.

இவ்வகையில் நீதி முறை தவறாது ஆட்சிபுரியும் நற்குணங்களையுடைய மன்னரைக் கண்டு சேவிப்பது இனிமையுடையதாகும். "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டவாறே" என்பதைப் போன்று மகிழ்ச்சியைத் தரும். கற்பு நிறை மனைவியோடு உள்ளன்பு கொண்டு கருத்தொருமித்து வாழ்தலும் சொர்க்கத்துக்கு இணையாகும். உயர்ந்ததாகிய மெய்ஞ்ஞான நூல்களைப் பயின்றும் பல அறிஞர் பெருமக்களுடன் கூடி இருந்து சிந்தித்தலும் சொர்க்கத்துக்கு இம்மூன்றும் இகலோக சொர்க்கம் எனக் கருதப்படுவது. இத்தன்மையில் எழுந்த பாடல் இது.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

நற்குண முடைய வேந்தை
நயந்துசே வித்த லொன்று
பொற்புடை மகளி ரோடு
பொருந்தியே வாழ்த லொன்று
பற்பல ரோடு நன்னூல்
பகர்ந்துவா சித்த லொன்று
சொற்பெறும் இவைகள் மூன்றும்
இம்மையிற் சொர்க்கம் தானே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

பொற்புடை மகளிர் – மனைவி.

## 43. சுகமான வாழ்க்கையின் அமைப்பு:

பாடற்குறிப்பு: உலக வாழ்க்கையில் சில பொருட்கள் மிக இன்றியமையாதனவாக உள்ளன. அரிசிச் சோறு இல்லையெனில் சுவைக்காது. மிளகுப்பொடி புளி

உப்பு ஆகியன இல்லாத உணவு சுவைக்காது. இவை உணவின் சுவைக்கு மெருகூட்டுவன. நெருப்பை உண்டாக்கி ஒளியைப் பெருக்கவும் உணவைச் சூடாக்கவும் பயன்படும் சக்கிமுக்கிக் கல் அல்லது நெருப்பை உண்டாக்கும் கருவி வேண்டும். கைராந்தல் வேண்டும். அரிவாள் நல்லாடை கூர்மையான ஆயுதம் ஊன்றுகோல் முதலானவை இருக்கவேண்டும். காலுக்கு மிதியடியும் கைக்குக் குடையும் இருத்தல் வேண்டும். மற்றும் கம்பளிப் போர்வை, ஊசி நூல் ஆகியவையும் வேண்டும். பணியாள் இருந்து பணி செய்வதற்கும் இருக்கவேண்டும். மற்றும் கையில் பணம், பூட்டு, சாவி, கூர்மையுள்ள கத்தி, எழுத்தாணி இவைகளும் இருக்கவேண்டும். சிற்றுண்டி வகையில் பலகாரங்களும் தாம்பூலம் தலைக்கு எண்ணெய், கைத்துண்டு, கரண்டி, நல்ல விளைவைத் தரும் நிலம், நிழலின் சிறப்பு, விறகு இவைகளும் வேண்டும். மங்கள கரமான வாசகத்தைப் பேசும் மனைவியும் வேண்டும். பயணம் செய்யும் போது உரிய தங்கும் இடங்களும் வாய்த்தல் வேண்டும்.

இவ்வாறு இனிய நிலைகளைப் பெறுதல் மகிழ்ச்சியை நல்கும் எனக் கருதிய புலவரின் பாடல் இது.

பதினான்கு சீர் ஆசிரிய விருத்தம்

தண்டுலம் மிளகின் தூள்பு ளியுப்பு
தாளிதம் பதார்த்த மிதேஷ்டம்
தாம்புநீர் தோற்றம் ஊன்றுகோல் ஆடை
சக்கி முக்கி கைராந்தல்

கண்டகங் காண்பான் பூஜைமுஸ் தீபு
கழல்குடை யேவல் சிற்றுண்டி
கம்பளி ஊசி நூலடைக் காயிலையைக்
கரண்டகங் கண்ட கேற்றங்கி
துண்டமுறிய காய் கரண்டி நல்லெண்ணெய்
தட்டன் பூட்டுமே கத்தி
சொல்லிய தெல்லாம் குறைவறத் திருத்தித்
தொகுத்துப் பற்பலவினும் அமைத்துப்
பெண்டுகள் துணையோடு எய்துவங் கனனாயப்
பெருநிலை நீர்நிழல் விறகு
பிரஜையும் தங்குமிடம் சமைத்துண்டு
புறப்படல் யாத்திரைக்(கு) அழகே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. வெளியூர் மற்றும் யாத்திரைக்குச் செல்லும்போது தேவைப்படும் பொருள்களையும் இவண் குறிப்பிடப்பட்டது. இவ்வாறு அமைவதாயின் சுகமான பயணம் ஆதலையும் அறிக. மற்றும் பாடற் குறிப்பில் உள்ளவாறும் நோக்குக.*

தண்டு – அரிசி, பெண்டுகள் – மகளிர், மனைவியையும் உணர்த்தும்.

## IX. துன்பநிலை

**44. பொதுமகளிரை விரும்பியவருக்குப் பாவமும் பிணியும் உண்டாகும்.**

பாடற்குறிப்பு: *வேதங்களை ஓதும் அந்தணர்கள், நாட்டை ஆட்சிபுரியும் மன்னர், வணிகர், வேளாண்மை செய்யும் உழவர்கள் ஆகியோர் பொது மகளிரை நயத்தல் கூடாது. அவ்வாறு உரிய நன்னெறியைக் கடைப்பிடிக்காது அத்தகைய மகளிரை*

விரும்பினால், தருமநெறி அழியும். பொருட்செல்வம் குன்றும்; எழில் மிகுவண்ணம், அறிவும் கெடும். உயிர் மாயும். மறுமையிலும் நற்கதி இன்றிக் கொடிய நரகத்தில் நீண்ட காலம் உழலும் நிலையில் பெரும் பாவத்தைப் புரிந்தவர்களாவார்கள். இத்தன்மையில் எழுந்தது இப்பாடல்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

அறங்கெடும் நிதியும் குன்றும்
ஆவியும் மாயும் காலம்
நிறங்கெடும் மதியும் போக
நீண்டதோர் நரகிற் சேர்க்கும்
அறங்கெடு மறையோர் மன்னன்
வணிகர்நல் லுழவோர் என்றும்
குலங்கெடு வேசை மாதர்
குணங்களை விரும்பி னோர்க்கே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் நோக்குக.

நிறம் – எழில்மிகும் தேகஅழகு.

45. தியானத்தில் பற்றுள்ளவர்கள் முத்தி நலத்தை யடைவார்கள். காம வெப்பத்தில் வாடுபவர்கள் புத்தி கெட்டு மரணத்தை யடைவார்கள்.

பாடற்குறிப்பு: உலக வாழ்க்கையில் பற்றற்றவராயும் யோகம் நிட்டை முதலான செயல்களில் நாட்டம் கொண்டவர்களாயும் உள்ளவர்கள் பரம்பொருளை எண்ணித் திருப்பாத மலரில் மனத்தைப் பதித்துப் பேரின்பத்தை அனுபவிப்பார்கள்.

புலனடக்கம் இன்றிக் காமவயப்பட்டவராகி அதிலேயே நாட்டம் கொண்டு மதிமயக்கம் உடையவராகியும் சிறுவர்களுக்கு மணம் பேசியும் தமது வாழ்க்கையை நடத்துபவர்கள் தாலி கட்டி வாழ்வதும், பின்னர் மரணத்திற்குப் பிறகு சுடுகாட்டில் கட்டைகளுக்கு இடையில் கிடத்தப்பட்டு எரிக்கப் பட்டுச் சாம்பலாகவும் ஆவதற்குரிய வாழ்க்கையை அனுபவிப்பார்கள். இத்தன்மையை ஓதும் பாடல் இது.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த**
**பெரியோர்க் கனிமலர்த் தாளைக்**
**கிட்டையிலே தொடுத்து முத்தி பெருமளவும்**
**பெரிய சுகங் கிடைக்குங்காம**
**வெட்டையிலே மதிமயங்கும் சிறுவருக்கு**
**மணம் பேசி விரும்பித் தாலி**
**கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே**
**கிடத்து மட்டுங் கவலை தானே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பும் காண்க.

கிட்டை - அண்மை என்பதும் ஆம். காமவெட்டை - காமத்தின் இழிவைச் சுட்டிற்று. தாலிகட்டை - ஏற்றமில்லாத மணவினை. நடுக்கட்டை - ஈமவிறகுக் கட்டை. காம விகாரத்தால் வாழ்பவர்கள் மரணகாலம் வரையிலும் துன்பத்தில் உழல்வார்கள் என்பதும் குறிப்பு.

## 46. இல்லறம் செய்யும் ஒரு விவசாயியின் துன்பம்.

பாடற்குறிப்பு: ஒரு விவசாயி அடுக்கடுக்கான துன்பங்களை அனுபவிக்கிறான். பெரு மழை பொழிய அவனுடைய வீட்டுச் சுவர் இடிந்து விழ மேலிருந்த

ஓடுகளும் சரிந்து பாழாயின. பசு கன்றை ஈன்றது. அதனைத் தகுந்த பாதுகாப்பு செய்வதற்கு வழியில்லை. அவ்விவசாயியின் மனைவிக்கு உடல் நலமில்லை. ஆங்குப் பணி செய்யும் பணியாள் ஒருவன் இறந்த தாகச் செய்தி வந்து கலங்கினான் அவன். நிலத்தில் ஈரம் காய்வதற்கு முன் விதைக்கச் செல்லும் போது முற்காலத்தில் கடன் கொடுத்த ஒருவன் வழியிலே மறித்துக்கொண்டு, கடனைத் திருப்பித் தருமாறு வெகுண்டான். அப்போது அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வரியைக் கேட்டுப் பெற அரசுத் தண்டலர் வந்தனர். திருக்கோயிலில் பூசை செய்யும் குருக்கள் தமக்குரிய தட்சணையைப் பெறுவதற்காக எதிர் நின்றார். இத்தன்மையில் இவ்விவசாயி வருந்துகின்ற நிலையில் பாவாணர் ஒருவர் இனிய கவிகளைப் பாடிச் சன்மானங்களை எதிர்பார்த்துக் கொண் டிருந்தார்.

அவ்விவசாயி இந்தச் சூழ்நிலையில் எத்துணைத் துன்பத்தை அடைந்தவனாக இருக்கக்கூடும்? இவ்வாறு சிந்தித்த புலவர் ஒருவரால் பாடப்பெற்ற பாடல் இது.

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

ஆவீன மழைபொழிய இல்லம் வீழ
        அகத்தினளும் மெய்நோவ அடிமை சாவ
மா ஈரம் போகுதென்று விதைகொண் டோட
        வழியிலே கடன்காரர் மறித்துக் கொள்ளக்
கோ வேந்தன் உழுதுண்ட கடமை கேட்கக்
        குருக்கள்வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்கப்

பாவாணர் கவிபாடிப் பரிசு கேட்கப்
பாவிமகன் படுதுயரம் பார்க்கொணாதே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பினையும் காண்க.

ஆவினா – பசு, ஈன, பசு கன்றுபோட, கோவேந்தன் – அரசன்.

## 47. எல்லோருக்கும் பகைவனாக இருக்கத் தக்கவன் இவனே என அறிவித்தல்:

பாடற்குறிப்பு: ஒருவனுக்குத் தன்னை ஈன்றெடுத்த தாய் பகையாகவும் மற்றையோர் நட்புப் பாராட்டவும் இருந்தாலும், தந்தை கடன்காரனாக இருந்தாலும், அவன் எல்லோருக்கும் பகைவனாக இருப்பான். மற்றும் ஒருவனுக்கு அழகு மிக்க மங்கையொருத்தி வாய்த்தாலும், நற்செயல்களையும் நல்லறங்களையும் மெய்ஞ்ஞான சாத்திர நூல்களையும் கற்றுணராத புதல்வன் இருப்பானேயானாலும் உலகில் பகைமையே பெருகச் செய்யும். இவ்வாறு கற்றுணர்ந்த சானன்றோர்கள் பகர்வர். இதனை விளக்கும் பாடல் இது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

தாய்பகை பிறர்நட் பாகில்
தந்தைகடன் கார னாகில்
வாய்பகை மனைவி யாரும்
மாவழ(கு) உற்ற போது
பேய்பகை பிள்ளை தானும்
பெருமைநூல் கல்லா விட்டால்
சேய்பகை யொருவர்க் காகும்
என்றனர் தெளிந்த நூலோர்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க. தாயைப் பகையாகக் கொண்டவன் மனிதத் தன்மையற்றவன் என்பதும் இவண் குறிப்பால் உணர்த்துவதாம். அழகிய மனைவி வாய்க்கப்பெறின் பிறர் பொறாமை கொள்ளுமாறு அமைதல் உலகியல்பு என்பதும் அதன் வாயிலாகப் பகைமை பெருகுவதற்கும் காரணம் ஆகும் என்பதும் இவண் கொள்ளத்தக்கது.

**48. தனது இயல்பான நிலையிலிருந்து மாறுபடு மானால் அதுவே கூற்றுவனாக இருந்து அழிவைத்தரும்.**

பாடற்குறிப்பு: ஒரு குளத்தில் தாமரை மலர் சூரியனைக் கண்டு மலர்கின்றது. ஆனால் அக்குளத்தில் உள்ள நீர் வற்றிவிட்டால், நன்கு மலரச் செய்யும் அச்சூரியனே கூற்றுவனாக இருந்து மலரை வாடி வதங்கச் செய்து விடுகின்றது.

காட்டில் தீயானது பற்றி எரியும்போது காற்று பெருகி வீசி மேலும் நெருப்பை எரியச் செய்கிறது. ஆனால், சிறு விளக்கின் தீபத்தைச் சிறிதளவு காற்றும் அணைப்பதற்குக் காரணமாகிவிடும். நெருப்பை கொழுந்து விட்டு எரியச் செய்யும் காற்று அதனை அணைப்பதற்கும் காரணமாகும். அதனைப் போன்று செல்வச் செழிப்புடன் இருந்த காலத்தில் நெருக்கமாக இருந்த உறவினர்கள் நிலை தளர்ந்து வறுமையில் வாடும் போது விலகிப் போவதும் பெருமையை மறந்து சிறுமை பேசிப் பகைமை கொள்வதும் இயல்பு. இத் தன்மையை எடுத்தோதும் பாடல் இது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

நிலை தளர்ந் திட்ட போது
நீணிலத் துறவு மில்லை
சலமிருந்(து) அகன்ற போது
தாமரைக்(கு) அருக்கன் கூற்றம்
பலவனம் எரியும் போது
பற்றுதீக்(கு) உருவாம் காற்று
மெலிவது விளக்கே யாகில்
மீண்டுமக் காற்றே கூற்றாம்.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.*

சலம் – தண்ணீர். அகன்ற போது – வறட்சிக் காலம். அருக்கன் – சூரியன். பலவனம் – அடர்ந்த காடு. தீ – நெருப்பு. கூற்று – இயமன். அழிப்பது.

### 40. உலகில் நியாயமில்லாதவர்களை நிந்திப்பது.

பாடற்குறிப்பு: *உலகத்தில் வேதநெறிப்படி விளங்குபவர்கள் அந்தணர்கள். அவர்கள் கருணையும் அன்பும் உடையவர்கள். பிறர் பொருளைக் கவர்தல் செய்யாதவர்கள். உத்தமச் செயல்களையே செய்பவர்கள். ஆனாலும் சில பிராமணர்கள் கருணையின்றியும் பொறுமையின்றியும் அலைந்து திரிகின்றார்கள். இவர்கள் கல் மனம் கொண்டவர்கள். இத்தன்மையில் வஞ்சித்து அலைந்து திரியும் இவர்களே போதும் என்று கருதாமல் காக்கைகளை ஈசன் ஏன் படைக்கவேண்டும். கல் மனம் கொண்ட இவர்களே காக்கையைப் போன்றவர்களன்றோ!*

*வாணிபம் செய்பவர்கள் உரிய விலை கொடுத்து வாங்குபவர்களுக்குத் தரமான பொருள்களைத்*

தருபவர்கள். சிலர் துன்மதியுடையவர்களாயும் பேராசை பிடித்தவர்களாயும் இருந்து பழுதுற்ற பொருள்களைக் கொடுத்துப் பெரு விலையைப் பெற்றவர்களாய் வாணிபம் செய்கின்றனர். இவர்கள் திருடர்களுக்கு ஒப்பாவார்கள். அங்ஙனமிருக்கத் திருடர்கள் எனத் தனியாக ஒரு கூட்டம் எதற்கு உலவுதல் வேண்டும்?

கொடுமை நிறைந்த கொள்ளையர்களைப் படைத்த இறைவன் கையில் உள்ள கைப் பொருள்களை அபகரிக்கும் குரங்குகளை ஏன் தனியாகப் படைக்கவேண்டும்?

இவ்வாறு உலக நிலையை எண்ணிப்பார்த்த புலவர் ஒருவர் இல்லந்தோறும் மேவும் சில அரிய நிலைகளைப் பற்றியும் கற்பனை செய்யலானார். பெண்களின் பார்வை வேல் போன்று கூர்மை யுடையது. அது உள்ளத்தில் மருட்சியை ஏற்படுத்தி மயக்கத்தை அளிக்கவல்லது. இது இயமனின் கூரிய படையைப் போன்று ஆடவரைத் தாக்கி நிலை குலைய வைப்பது. எனவே இறைவன் இயமனையும் வேறு படைக்க வேண்டுமோ! அதன் காரணம் தான் விளங்க வில்லையே!

இதனை எதிரொலிப்பது இப்பாடல்.

**எழுசீரடி ஆசிரிய விருத்தம்**

**கன்மனப் பார்ப்பர் தங்களைப் படைத்துக்**
**காகத்தை என்செயப் படைத்தாய்**
**துன்மதி வணிகர் தங்களைப் படைத்துச்**
**சோரரை யென்செயப் படைத்தாய்**

வன்மன வடுகர் தங்களைப் படைத்து
வானரம் என்செயப் படைத்தாய்
நன்மனை தோறும் பெண்களைப் படைத்து
நமனையும் என்செயப் படைத்தாய்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் நோக்குக. கல் மனப் பிராமணர்கள் காகத்துக்கும், துன்மதி வணிகர்கள் திருடர்களுக்கும் கொள்ளைக்காரர்கள் குரங்குகளுக் கும் அழகிய மாதரின் விழிகள் இயமனுக்கும் உவமை யாயிற்று.

பார்ப்பர் – பிராமணர், சோரம் – திருடர், வஞ்சகர், வடுகர் – கொள்ளையர், நமன் – இயமன்.

## 50. மானிடரின் இன்பம் அநித்தியமே:

பாடற்குறிப்பு: மனிதர்கள் இன்பத்தைப் பெரிதாகக் கருதிப் பாடுபடுகின்றனர். இன்பம் அற்பமானது. அதனினும் வாழ்க்கை நிலையற்றது.

வானத்தில் கருடன் ஒன்று பறந்து கொண்டிருந்தது. அது ஒரு நாகத்தை இரையாகக் கொண்டிருந்தது. அந்த நாகம் தான் கருடனுக்கு இரையாகி இருத்தலை உணராது வாயில் தேரை ஒன்றைத் தனக்கு உணவாகக் கொண்டிருந்தது. அத் தேரையும் வண்டு ஒன்றைத் தன் உணவாகக் கொண்டிருக்க, அது தேன் துளியைச் சுவைத்துக் கொண்டிருந்தது. இந்நிலையாமையை அறியாத மாந்தர் இன்பத்தின் பால் நாட்டம் கொண்டுள்ளனர். இத்தன்மையை விளம்பும் பாடல் இது.

கலி நிலைத்துறை

கொண்டு விண்படர் கருடன்வாய்க்
கொடுவரி நாகம்
விண்ட நாகத்தின் வாயினில்
வெருண்ட வன் தேரை
மண்டு தேரையின் வாயினில்
அகப்படு தும்பி
வண்டு தேன்நுகர் இன்பமே
மானிடர் இன்பம்.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.*

*இவ்வகையில் திருஞானசம்பந்தர்,*

"செடிகொடிகள் நோய் யாக்கை ஐம்பாம்பின் வாய்த்
தேரைவாய்ச் சிறு பறவை
கடிகொள் பூந் தேன்சுவைத்து இன்புற
லாம்என்று கருதினாயே
முடிகளால் வானவர் முன்பணிந்து
அன்பராய் ஏத்து முக்கண்
அடிகள் ஆரூர்தொழுது உய்யலாம்
மையல்கொண்டு அஞ்சல் நெஞ்சே."

– தேவாரம் இரண்டாம் திருமுறை பாடல் 860

*என உணர்த்தியவாறும் காண்க.*

**51. அற்பப் பொருளைப்பெற ஆசைப்படுதல் துன்பத்தையே விளைவிக்கும்.**

பாடற்குறிப்பு: *வேடன் ஒருவன் ஒரு யானையைத் தன் அம்பினால் எய்து கொன்றான். அவன் அம்பினை எய்யும்போது நாகம் ஒன்று அவனைத் தீண்டியது.*

உடனே அவ்வேடன் தான் வைத்திருந்த அம்பு ஒன்றால் அடித்து நாகத்தைக் கொன்றான். நாகத்தால் தீண்டப்பெற்ற வேடனும் சிறிது நேரத்தில் மாண்டான். அந்த இடத்திற்கு நரியொன்று சென்றது. அது தனக்கு பெருத்த அளவில் உணவு கிடைத்து விட்டது எனப் பூரித்தது. இறந்த யானை ஆறுமாதங்களுக்கு உணவாகும் எனக் கருதி அதனைப் பின்னர் உண்ணலாம் என எண்ணிற்று. அடுத்து நரி வேடனுடைய உடலைத் தின்னலாம் எனக் கருத, அவ்வுடல் மூன்று நாளுக்குப் பயன்படும் எனத் தீர்மானித்து இறந்து கிடந்த நாகத்தை நோக்கிச் சென்றது. பின்னர் அதனை உண்பதன் முன்னே வேடன் கையில் இருந்த வில்லின் நரம்பினைச் சுவைக்கலாம் என நினைத்து, நரி அதனைக் கடித்தது. அந்நரம்பைக் கடித்ததும் வில்லின் வளைவு நிமிர்ந்து அதன் தலையில் அடிக்க அக்கணமே நரியும் இறந்தது. ஆசை வயப்பட்டு மாண்ட இந்நிகழ்ச்சியைக் குறித்து எழுந்த பாடல் இது.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**கரியொரு திங்க ளாறு**
**கானவன் மூன்று நாளும்**
**இரிதலைப் புற்றில் நாகம்**
**இன்றுகாணும் இரைஈ தென்று**
**விரிதலை வேடன் கையில்**
**விற்குதை நரம்பைக் கவ்வி**
**நரியனார் பட்ட பாடு**
**நாளைநாம் படவே போறோம்.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பையும் காண்க.

கரி – யானை; திங்கள் – மாதம். கானவன் – வேடன். நரியனார் – நரி. இழிவு. சிறப்பு, நரியைப் போன்று ஆசையால் திரியும் மாந்தர்.

## X. பாவத்தின் தன்மை

### 52. பயனற்ற செயல்களை விளம்புதல்:

**பாடற்குறிப்பு:** *சான்றாண்மை மிக்க சீலர் ஒருவர் உபதேசம் செய்து கொண்டிருந்தார். அவர், எல்லோரும் கருதி ஏத்தும் மெய்ஞ்ஞானத்தை ஓதும் சாத்திரங்களைக் கற்கவேண்டும் என்றார். அவ்வாறு கல்லாதது அறியாமையாகும் என்று வலியுறுத்தினார். மற்றும் அளவறிந்தும் பயன் விளையுமாறும் பேசாதவன் குற்றமுடையவன் எனவும், ஒரு வேலையும் செய்யாது பொழுதைக் கழிப்பவன் மூதேவி எனவும், யாருக்கும் பயன்படாதவன் சோம்பேறி எனவும் பெரியோர்களைக் கண்டு வணங்கி ஆசி பெறாதவன் பேய்க்கு ஒப்பானவன் எனவும் ஒருவன் இடும் பணியைச் செய்யாமைக்கு இனிமையாய் ஏதேனும் ஒரு காரணத்தைக் கூறி அதைச் செய்யாது நழுவுபவன் பொய்யன் எனவும் கூறினார். மற்றும் பசியுடன் இருப்பவர்களுக்கு உணவளித்து அதன் பின்னர் தான் உண்ணுதலே ஏற்றது. இவ்வாறு செய்யாதவன் பாவியாவான் எனவும் உரைத்தார்.*

*இவ்அறிவுரைகளை உணர்த்தும் பாடல் இது.*

**எண்சீர் ஆசிரிய விருத்தம்**

**கருதியநூல் கல்லாதான் மூட னாகும்**
**கணக்கறிந்து பேசாதான் கசட னாகும்**

ஒருதொழிலும் இல்லாதான் முகடி யாகும்
ஒன்றுக்கும் உதவாதான் சோம்பனாகும்
பெரியோர்கள் முன்னின்று மரத்தைப் போலும்
பேசாமல் இருப்பவனே பேய னாகும்
பரிவுசொலி நழுவினவன் பசப்ப னாகும்
பசிப்பவருக் கிட்டுண்ணான் பாவியாமே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உரைத்தவாறும் கொள்க.*

கருதிய நூல் – ஞான நூல். முகடி – மூதேவி.

**53. தன் வாயில் இருந்த உணவைத் துறந்த நரியும் கணவனைச் சினந்து வெளியே வந்து கண் கலங்கிய காரிகையும்:**

பாடற்குறிப்பு: *ஒரு வாய்க்காலில் நரி ஒன்று நின்று கொண்டிருந்தது. அது வாயில் ஒரு மீனைக் கவ்விக் கொண்டிருந்தது. வாய்க்காலின் இடையில் ஓடும், தண்ணீரில் ஓடிக்கொண்டிருக்கும் மீனைப் பார்த்ததும் அதைக் கொல்லவேண்டும் என்னும் நோக்கத்தில் தன் வாயில் கவ்வியிருந்த மீனையும் விட்டுவிட்டது. இதனைக் கண்டு கணவனைக் குறை சொல்லி வெளியேறிய ஒரு பெண், அந்த நரியைப் பார்த்து, "ஒரு மீனை உண்ணும் பொருட்டு உன் வாயிலிருந்த உணவையும் இழந்து விட்டாயோ?" எனப் பரிவுடன் கேட்டாள். அதற்கு அந்த நரி "இதனைப் போன்று கண் பிழை உலகத்தில் இல்லையோ! நீயும் கணவனைக் குற்றம் சொல்லிவிட்டுக் கண்ணீர்விட்டுப் புலம்ப வில்லையோ!" என்றது.*

*உள்ளதை இழந்து அல்லல் படுகின்ற இந்நிலையை விளம்பும் பாடல் இது.*

கலி விருத்தம்

ஓரியே மீனுவந்(து) ஊணிழந்து தையோ
நாரியே கண்பிழை நாட்டில் இல்லையோ
பாரியே கணவனைப் பழுது செய்துநீ
நீரிலே யாருப்பது நிலைமை யல்லவே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பும் காண்க.*

ஓரி – நரி. ஊண் – உணவு. நாரி – பெண். பாரி – பெண். மனைவி
நீர் – கண்ணீர், துன்பம்.

## 54. நல்லதைக் கைவிட்டுத் தீயதை நாடியது.

பாடற்குறிப்பு: *பாடல் எண் 53 இல் உள்ளவாறு காண்க.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

சம்புவே என்ன புத்தி
சலந்தனில் மீனை நம்பி
வம்புறு வடத்தைப் போட்டு
வானத்தைப் பார்ப்ப தேனோ
அம்புவி மாதே கேளாய்
அரசனை அகல விட்டு
வம்பனைக் கைப்பி டித்த
வாறுபோல் ஆயிற் றன்றே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை.*

சம்பு – நரி. வடம் – உலர்ந்தமீன். அரசன் – பாதுகாக்கும் தலைவன்
நாயகன். வம்பன் – கொடியவன்.

## 55. வண்டிச்சக்கரத்துக்கு அச்சாணி போன்று வாழ்க்கைக்கு இன்றியமையாதவை கூறுதல்:

**பாடற்குறிப்பு:** ஒரு வண்டி நன்கு செல்ல வேண்டுமானால் வண்டிச் சக்கரம் நன்கு விளங்குவ தோடன்றி அதற்கு அச்சாணியும் உறுதியுடன் இருக்கவேண்டும். அதனைப் போலவே ஒவ்வொரு வருக்கும் சில வரம்புகள் தேவை. கன்னிப் பெண் தனியாக இருக்கக்கூடாது. அவளை விட வயதில் நன்கு மூத்து விளங்கும் ஒரு பெண்ணின் பாதுகாப்பு அவளுக்குத் தேவை. அரசன் வீரதீரத்துடன் விளங்கவேண்டுமானால் சினமும் உரிய அளவில் அவனிடம் குடி கொண்டிருக்க வேண்டும். சினம் இல்லாத வீரம் சிறக்காது. நில்ததில் நன்கு விளைச்சல் உண்டாக வேண்டுமானால் உரிய பாதுகாப்பு வேண்டும். வேலியில்லாத பயிர் செழிக்காது. ஏரியில் நீர் நிறைய வேண்டுமானால் உயர்ந்த கரை வேண்டும். எல்லாச் சிறப்புக்களும் ஒருவன் பெற்றிருந்தாலன்றி அவனுடைய அழகில் அலங்காரம் பெருமைக்குரிய தாகாது. சிறந்த நூல்களைக் கற்று ஞானம் கொண்டவனாக இருந்தாலும் குருவின் அருள் இல்லையெனில் சிறப்படையாது. இது உலக இயற்கை. இதனை உரைப்பது இப்பாடல்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

மூப்பிலாக் குமரி வாழ்க்கை
முனிவிலா அரசன் வீரம்
காப்பிலா விளைந்த பூமி
கரையிலா திருந்த ஏரி

கோப்பிலான் கொண்ட கோலம்
குருவிலான் கொண்ட ஞானம்
ஆப்பிலாச் சகடு போல
அழியும் என்று உரைக்க லாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

மூப்பு – வயதில் மூத்தவள். முனிவு – சினம். காப்பு – வேலி, பாதுகாப்பு. ஆப்பு – கடையாணி. அச்சாணி.

## 56. தாய், தந்தை, குரு, தெய்வம் ஆகியோர் உரைகளை மதித்து ஒழுகுதல் வேண்டும்.

பாடற்குறிப்பு: தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்னும் வகையில் ஒருவன் தந்தையின் சொற்களை மதித்து நடக்கவேண்டும்.. தாயிற் சிறந்த கோயிலும் இல்லை என்னும் வகையில் தாயின் உரையை இகழ்ச்சி செய்யாது ஏற்கவேண்டும். குருவே ஒருவனுக்குத் தகுந்த ஒளிவிளக்காகி வழி காட்டுதலால் குரு மொழிடை ஆணையாக ஏற்று நடக்கவேண்டும். சந்தம் கொண்ட பாடல்களால் வேதநெறியாக அருளிச் செய்யப் பெற்ற திருஞான சம்பந்தரின் தேவாரத் திருமுறைகளை ஓதுதலும் அதன் வழி நடத்தலும் இன்றியமையாதது. இத்தகைய நான்கு தன்மைகளை யும் அறிந்து நடக்காதவர்கள் நற்கதியை அடையாதவர் களாய்ப் பிறவிப் பெருங்கடலுள் வீழ்வார்கள். இக்கருத்தை வலியுறுத்தும் பாடல் இது.

தந்தையுரையைத் தட்டியவன் துரியோதனன், கம்சன் எனவும், தாயுரை இகழந்தவன் நரகாசுரன் எனவும் தேசிகர் ஆணையை மறந்தவன் கர்ணன் எனவும் கூறுப.

## கலி விருத்தம்

**தந்தையுரை தட்டினவன் தாயுரை இகழ்ந்தோன்**
**அந்தமறு தேசிகர்தம் ஆணையை மறந்தோன்**
**சந்தமுறு வேதநெறி மாறினவர் நால்வர்**
**செந்தழலின் வாயினிடை சேர்வதுமெய் கண்டீர்.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

அந்தமறு – அழிதல் இல்லாத மெய்ஞ்ஞானகுரு.

வின் சிறப்பினை உரைத்தல். சந்தமுறு வேதநெறி – சந்தம் மலிந்து விளங்குமாறும் வேதநெறி தழைக்குமாறும் பாடியருளிச் செய்தவர் திருஞான சம்பந்தர். தேவாரத் திருமுறைகளின் சிறப்பு விளங்கும் வகையில் "வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்க பூத பரம்பரை பொலிய புனிதவாய் மலர்ந்தமுத சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்" என்பது சேக்கிழார் சுவாமிகளின் (பெரிய புராணம்) திருவாக்கு.

மெய் – உறுதிப்பொருளாகிய உரை.

## 57. நடுநிலையிலிருந்து நீதி வழங்காதவர்கள் குருடாகிக் கெட்டழிவர் எனல்.

**பாடற்குறிப்பு:** *ஏழைப் பெண்கள் வழக்குத் தொடுத்தாலும் நடு நிலையில் இருந்து நீதி வழங்கிப் பரிபாலனம் செய்பவர்களே தூயவர் ஆவார்கள். அத்தகைய நீதிமான்கள் பெரிய தடாகம் போன்று மன மலர்ச்சியுடனும் யாவரும் புகழத்தக்கப் பெருமை யுடனும் விளங்குவார்கள். ஆனால் ஒருதலைப் பட்சமாக இருந்து தமக்கு வேண்டியவர்கள் என்னும் தன்மையிலும் தமக்கு உரிய வெகுமதியைத் தருபவர்கள் என்னும் தன்மையிலும் நடு நிலையிலி ருந்து பிறழ்ந்து நீதியற்ற முறையில் வழக்கைக்*

கையாளுபவர்கள் தம் சுற்றத்தார் புதல்வர் என யாவரையும் இழந்தும், கண்கள் இரண்டும் தெரியாத குருடர்களாகியும் துன்புற்று அழிவார்கள்.

இதனைச் சாற்றுவது இப்பாடல்.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நாரிகள் வழக்க தாயின்
நடுவறிந்து உரைப்பார் சுத்தர்
ஏரிபோற் பெருகி மண்மேல்
இருகணும் விளங்கி வாழ்வார்
ஓரமே சொல்வ ராகில்
ஓங்கிய கிளையும் மாண்டு
தீரவே கண்கள் ரெண்டும்
தெரியாது போவார் தாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

நாரி – ஏழைப் பெண்கள் ஏரி போற் பெருகி– செல்வ வாழ்க்கை. தாமரைத் தடாக வாழ்வு என்னும் பொருள். ஓரம் – ஒருதலைப் பட்சம். கிளை – புதல்வர் மற்றும் சுற்றத்தார்.

## 58. ஒருவர் செய்யும் தீங்கு பிறர்க்குப் பாவமாதலை உரைத்தல்.

பாடற்குறிப்பு: உலகில் யாவற்றையும் தனது உடமையாக்கி ஆதிக்கம் பெற்று ஆட்சி புரிவதால் உலகத்தில் உள்ள மக்கள் செய்யும் பாவம் மன்னனைச் சார்கின்றது. மன்னனைத் தகுந்த முறையில் நன்னெறிக்கண் செலுத்தும் பொறுப்பு மந்திரியிடம் இருப்பதால், மன்னன் செய்யும் தீமை மந்திரியையே சார்வதாகும். குருவானவர் நல்லுபதேசத்தைப் புரியாதவராயின், தொண்டர்கள் செய்யும் பாவம்

அக்குருவையே சாரும். அதைப் போன்று கற்கண்டு போன்று இனிய மொழி பேசும் பெண்ணொருத்தி செய்யும் பாவம் அவள் கணவனைச் சாரும். இது ஒரு கணவன் அக்குடும்பத்தின் தலைவன் என்பதால் மேவும் இயல்பு. இத்தன்மையை உரைக்கும் பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

மண்டலத் தோர்கள் செய்த
பாவம்மன் னவரைச் சாரும்
திண்டிநல் மன்னர் செய்த
தீங்குமந் திரியைச் சாரும்
தொண்டர்கள் செய்த தோஷம்
தொடர்ந்துதம் குருவைச் சாரும்
கண்டன மொழியாள் செய்த
கன்மமும் கணவர்க்காமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. மண்டலத்தோர் - நாட்டு மக்கள் கண்டு - கற்கண்டு, இனிமையைக் குறித்தது.

**59. அவரவருடைய குணப்பாங்கை மாற்ற முடியாது:**

பாடற்குறிப்பு: அருமையுடைய ஞான நூல்களை ஒருவர்க்கு ஓதுவித்தாலும் தீய குணத்தையுடைய பேதைகள் தமது இயல்பிலிருந்து மாறி நற்குண மாந்தராக முடியாது. அவரவர்களுடைய தீய குணங்களே முன்னின்று வெளிப்படும். இது கற்பூரம் முதலான உயர்ந்த பொருள்களைக் கொண்டு பாத்தியமைத்துக் கஸ்தூரி என்னும் வாசனைப்

*பொருளை யிட்டு வெங்காயத்தைப் பயிர் செய்தாலும் அதன் குணம் மாறாததைப் போன்றதாகும்.*

*இவ்வியல்பை விளக்கும் பாடல் இது.*

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**கற்பூரப் பாத்திகட்டிக் கஸ்தூரி**
**எருப் போட்டுக் கமழ்நீர் பாய்ச்சிப்**
**பொற்பூர வுள்ளியினை விதைத்தாலும்**
**அதன்குணமே பொருந்தக் காட்டும்**
**சொற்பேதை யர்க்கறிவிங் கினிதாக**
**வருமெனவே சொல்லி னாலும்**
**நற்போதம் வாரா(து)அங்(கு) அவர்குணமே**
**மேலாக நடக்குந் தானே.**

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை.*

கமழ் நீர் – வாசனை கமழும் பன்னீர். உள்ளி – வெங்காயம். நற்போதம் – மெய்ஞ்ஞானம், நற்குணம்.

### 60. செய்யத் தகாததும் செய்யத் தகுந்ததும் உரைத்தல்:

**பாடற்குறிப்பு:** *உலகில் பிறந்த மனிதன் தரும நெறியில் வாழவேண்டும். நண்பர்களுக்கு வஞ்சனை செய்யக் கூடாது. பிறன் மனைவியை விரும்பி நாடுதல் கூடாது. இதனைத் திருவள்ளுவர் "பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு அறன் ஒன்றோ ஆன்ற ஒழுக்கு" எனக் கூறுதலையும் காண்க. கற்பின் மிக்க தனது மனைவியின் விருப்பம் நிறைவடையும் தன்மையில் கூடி ஒருவன் மகிழ்வைத் தருதல் வேண்டும். விருந்தினர்களைக் கண்ட போது அஞ்சி ஓடி ஒளியாது முன் சென்று அழைத்து உபசாரம்*

செய்பவனாகி உணவிடுதல் வேண்டும். இவ்வாறு சொல்லப்பட்ட அறத்தின்படி ஒழுகாதவர்கள் நீண்ட காலம் உலகில் வாழ்பவர்களானாலும் உடற்பிணி கொண்டவர்களாக இருப்பார்கள். இறுதியில் பாவத்தைச் சுமப்பவர்களாகிக் கொடிய நரகத்தில் வீழ்பவர்களாவார்கள். இதனை விளக்கும் பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நட்பிடைக் குய்யம் வைத்தார்
பிறன்மனை நலத்தைச் சேர்வார்
கற்புடைக் காமத் தீயார்
கன்னியை விலக்கி னோரும்
அட்டுடன் அஞ்சு கின்றோர்
ஆயுளும் கொண்டு நின்று
குட்டநோய் நரகில் வீழ்ந்து
குளிப்பவர் இவர்கள் கண்டாய்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

குய்யம் – வஞ்சனை. அட்டுடன் அஞ்சுகின்றோர். 1. விருந்தினர்களை உபசரித்து உணவு படைத்து நலம் காண அஞ்சும் மாந்தர். 2. போர்க் களத்தில் சென்று போரிட அஞ்சும் கோழைகள்.

## XI. ஆற்பத்தனம்

### 61. அருள் விளங்கும் அறச்செயலை விரும்பாதவர்கள் தன்னைத் தண்டிப்பவர்களுக்கே அடங்குவார்கள் எனல்:

பாடற் குறிப்பு: ஒரு ஊரில் தனவந்தர் ஒருவர் இருந்தார். அவர் தருமம் செய்வதை வெறுப்பவர். வட்டிக்கும் வட்டிவாங்கிப் பொருளைச் சேர்த்துவந்தார்.

வேசியர்பால் ஈடுபாடு கொண்டு, தான் விரும்பிய வாறு செலவு செய்வாரேயன்றி அறச்செயல்களுக்குச் சிறிதும் உதவமாட்டார். அவர் முன்னால், தன்மையும் அறியாது யாசகம் கேட்டு வந்து விட்டாலும் கடுமையாகச் சாடித்துரத்தி விடுவார். ஒரு நாள் அவர் வெளியூருக்குச் செல்ல வேண்டியிருந்தது. மாட்டு வண்டியில் சென்று கொண்டிருந்தார். வழியில் ஒரு காடு. இடையில் சிக்கிக் கொண்டால் ஆபத்து. எனவே இருட்டுவதற்குள் காட்டைக் கடந்தால் நல்லது எனத் துணிந்தார். வண்டியோட்டி இரவு அந்த ஊரில் தங்கியிருந்து மறுநாள் காலை பயணம் செய்யலாம் என்றான். அச்செல்வந்தர் அவ்வூரில் தங்கினால் செலவு ஆகும் எனக் கருதிக் காட்டு வழியைத் துணிவுடன் கடக்கலானார். நள்ளிரவு நேரத்தில் கள்ளர்கள் கூடி அச்செல்வந்தரை வழிமறித்து விலையுயர்ந்த ஆடை ஆபரணம் பணம் ஆகியவற்றைப் பறித்துச் சென்று விட்டனர். யாருக்கும் உதவாத அவருடைய பொருள் கள்ளர்களுக்கே சென்றன.

இத்தன்மையை விளக்கும் பாடல் இது. மனமுவந்து ஈயாதவர்களால் வன்மை வழியில் பொருளை இழந்து வாடும் நிலையைக்காட்டுவது இப் பாடல்.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

பொருட்பாலை விரும்புவார்கள் காமப்பா
லிடை மூழ்கிப் புரள்வர் கீர்த்தி
அருட் பாலாம் அறப்பாலைக் கனவிலுமே
விரும்பார்கள் அறிவொன் றில்லார்

குருபாலர் கடவுளர் பால் வேதியர் பால்
புலவர் பாற் கொடுக்க ஓரார்
செருப்பாலே அடிப்பவர்க்கு விருப்பாலே
கோடி செம் பொன் சேவித் தீவார்.

**தெளிவுரை:** *சிலர் பொருட் செல்வத்தை விரும்பு வார்கள்; காமத்தின் பாற் பற்றுக் கொண்டு செலவழித்துப் புரள்வார்கள். ஆனால் அருளைப் புரியும் அறச்செயல்களுக்கு உதவி புரிய மாட்டார்கள். இவர்கள் அறிவற்றவர்கள். இவர்களுக்குக் குருவுக்கும், தெய்வகாரியங்களுக்கும், வேதம் ஓதும் அந்தணர் களுக்கும், புலவர்களுக்கும் உதவி புரிய மனம் வராது. ஆனால் தம்மை அடித்து அச்சுறுத்துபவர்களுக்கு அஞ்சி, தம் உயிரைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்னும் ஆசையால் அக்கொடியவர்களுக்குக் கோடிப் பொன்னும் வணக்கத்துடன் கொடுப்பார்கள்.*

*விருப்பு - உயிர்மீது உள்ள ஆசை.*

**62. ஈனர்களுக்கு நற்புத்தி யுரைத்தல் தீமை யையே தரும்:**

**பாடற்குறிப்பு:** *குரங்கு ஒன்று மழையில் நனைந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட தூக்கணாங் குருவி அக் குரங்கைப் பார்த்துக் "காலமெல்லாம் பயனின்றித் திரிந்து கிளைக்குக் கிளை தாவி இருப்பதை விட்டுப் பொறுப்புடன் ஒரு கூண்டினைக் கட்டிக் கொண்டிருந்தால் இவ்வாறு மழையில் நனைவதைத் தவிர்த்திருக்கலாமே!" எனக் கூறியது. இதைக் கேட்டதும் அக்குரங்கு சினங்கொண்டு தூக்கணாங் குருவியின் கூட்டைப் பிய்த்து விட்டது. ஈனர்களுக்குச்*

செய்யும் நல்லுரை தனக்கே துன்பம் விளைவிக்குமாறு அமைந்தது.

இத்தன்மையில் பாடல் எண் 39 இல் உரைத்த வாறும் காண்க.

**கலி விருத்தம்**

வானரம் மழைதனில் நனையத் தூக்கணம்
தானொரு நெறி சொலத் தாண்டிப் பிய்த்திடும்
ஞானமும் கல்வியும் நவின்ற நூல்களும்
ஈனருக்கு உரைத்திடில் இடர தாகுமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

தூக்கணம் – தூக்கணம் குருவி.

## 63. நற்பாங்குடையவரை நண்ணினோர் நன்மையை அடைவர்:

பாடற்குறிப்பு: தன் இளம் வயதில் தாய் தந்தைக்கும் பெரியோர்களுக்கும் அடங்காத சிறுவன் ஒருவன் வெளியூர் செல்லத் திட்டமிட்டான். வெளியில் அவன் பலராலும் தண்டிக்கப்பட்டுக் கடைசியாக ஒரு ஆசிரமத்தை அடைந்தான். அப்போது அவனுக்கு நல்ல பசி. ஆசிரமத்தின் குரு அவனை அழைத்துச் சென்று உணவளிக்குமாறு தம் சீடர்களைப் பணித்தார். நாளடைவில் அவனும் சீடனாகி ஆசிரமத்திலேயே தங்கிவிட்டான். அவன் உட்கொண்ட சத்வ குணச்சார்பான உணவும் குருவின் உபதேச மொழிகளும் அவனை நன்கு பக்குவப் படுத்திவிட்டன.

மெய்த்தவத்தை மேற்கொண்டு குருவின் பாதத்தையே பெரிதும் போற்றி வந்தான். இந்நிலையில் நற்குருவைச் சார்ந்த ஒருவன் நற்குணச் சீலனாகி யாவராலும் பாராட்டத் தக்கவனானான். இக்கருத்தைச் சாற்றும் பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

**கற்பகத் தருவைச் சார்ந்த**
**காகமும் அமுதம் உண்ணும்**
**விற்பனை விவேக முள்ள**
**வேந்தரைச் சேர்ந்தார் வாழ்வார்**
**இப் புவி தன்னில் ஒன்றி**
**இலவு காத் திடுங்கி ளிபோல்**
**அற்பரைச் சேர்ந்தார் வாழ்வும்**
**அரி தரி தாகும் அம்மா.**

**தெளிவுரை:** ஒரு காக்கை தேவலோகத்தில் உள்ள கற்பகத் தருவில் அமர்ந்திருக்குமானால் அது அமுதத்தை உண்டு வாழும் இயல்பினையும் பெறும். கலைஞானமும் அறிவுக் கூர்மையும் உடைய மன்னரைச் சார்ந்து இருப்பவர்கள் பெருமையுடன் இனிது வாழ்வார்கள். ஆனால் அற்பரைச் சார்ந்தவர்கள் இலவு காத்த கிளியைப் போன்று வாடிச் சீர்குலைவார்கள். அவர்களுக்கு இனிய வாழ்க்கை அமைவது இல்லை.

தரு – மரம், அரிது – இல்லை. இலவு காத்தகிளி – இலவம் பஞ்சு காய்க்கும் மரத்தில் வாழும் கிளி, பசுமை நிறத்தில் காணப்பெறும் பஞ்சுக் காய்கள் பின்னர்ப் பழமாகும் எனக் காத்திருக்கும். வேறு இடத்திற்குச் சென்று தன் ஆகாரத்தையும் கொள்ளாது. அங்கேயே இருந்து பசியால் வாடி வதங்கும். நாளடைவில் பஞ்சுக்காய்கள் வெடித்துச் சிதறினாலும் அக்கிளி எஞ்சியுள்ள காய்கள் பழுக்கும் என

ஏமாந்து அழியும். இதில் இலவமரம் அற்பர்களுக்கு உவமையாக உரைக்கப்பட்டது.

## 64. ஈனப் பிறவியுடைய அற்பனைக் காட்டுதல்:

பாடற் குறிப்பு: *கடைப்பட்ட குணம் உடையவர்களை எக்காலத்திலும் நன்னெறிக்கு ஆட்படுத்த முடியாது. நாய் வாலை அளவு கொண்டு சீர்ப்படுத்தினாலும் அது, நற்றமிழை ஓலைச் சுவடியில் எழுதப் பயன்படும் எழுத்தாணியாகாது.*

*பேய் குடி கொண்டு வாழும் சுடுகாட்டைத் தூய்மையாக்கி விளக்கேற்றி வைத்தாலும் அது குடியிருக்கும் வீடாகாது.*

*தாயின் வார்த்தையைக் கேட்டு நடக்காத கயவனுக்கு எத்தனை முறை உபதேசித்தாலும் அவன் கீழ்மைக் குணம் அகலாது.*

*தருமம் செய்பவரைத் தடுத்தும் இடையூறு செய்தும் உலகில் வாழ்பவன் மறுமையில் எடுக்கின்ற பிறவி யாவும் ஈனம் உடையதாகவே இருக்கும் அவனுக்குக் கடைப்பட்ட பிறவியே உண்டாகும்.*

### எண் சீர் ஆசிரிய விருத்தம்

நாய்வாலை அளவெடுத்துப் பெருக்குத் தீட்டில்
நற்றமிழை எழுத எழுத் தாணி யாமோ
பேய் வாழும் சுடுகாட்டைப் பெருக்கித் தள்ளிப்
பெரிய விளக் கேற்றி வைத்தால் வீட தாமோ
தாய் வார்த்தை கேளாத சகசண் டிக்கென்
சாற்றிடினும் உலுத்த குணம் தவிர மாட்டான்
ஈவாரை ஈய வொட்டான் அவனும் ஈயான்
எழு பிறப்பி னும்கடையாம் இவன் பிறப்பே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. தாயின் வார்த்தைகளைத் தட்டக் கூடாது என்பதும், தருமம் செய்வதைத் தடுக்கக்கூடாது என்பதும், தானும் தருமம் செய்ய வேண்டும் என்பதும் இப்பாடலின் வாயிலாகக் கூறும் அறிவுரை. (பாடல் எண் 37 இல் உள்ள கருத்தையும் நோக்குக.)

**65. விருப்பம் இல்லாதவருடன் வாழ்வதும் அற்பர்களுடன் தோழமை கொள்வதும் பயனற்றது!**

பாடற்குறிப்பு: பெற்றோர் தம் பெண்ணுக்குத் திரண்ட செல்வங்களைச் சீதனமாக அளித்து ஆடையாபரணங்களையும் பூட்டி ஒரு ஆடவனுக்குத் திருமணம் செய்து வைத்தனர். ஆனால் அவனுக்குத் திருமணத்தின் மீது விருப்பம் இல்லை. இல்லற வாழ்க்கையிலும் விருப்பம் இல்லை. திருமணத்தன்றே அவன் தன் மனைவியை விட்டு நீங்கினான். விருப்பம் இல்லாத ஒருவனுக்குத் திருமணம் செய்து வைக்கப்பட்ட அப்பெண்மணியின் வாழ்க்கை பாழாகி விட்டது. அதனைப் போன்று செருக்குடைய ஒருவனைத் தோழமையாகக் கொள்பவன் அவமானத்தையே அடைவான். அத் தோழமையால் ஒருவன் சிறுமையடைதலே மிஞ்சும்.

இக்கருத்தை விளக்கும் பாடல் வருமாறு.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

பருப்ப தங்கள் போல் நிறைந்திடு
நவ மணிப் பலன்களைக் கொடுத்தாலும்
விருப்பு நீங்கிய கணவரைத்
தழுவுதல் வினைதாம் விரையார்ந்த

குருக்கு சந்தனக் குழம்பினை
அன்பொடு குளிர்தர அணிந்தாலும்
செருக்கு மிஞ்சிய அற்பர்தம்
தோழமை செப்பவும் ஆகாதே.

**தெளிவுரை:** *மலைகள் போன்று விளங்கும் பெருஞ் செல்வங்களுடன் நவமணிகளும் பெருகச் சீதனமாகக் கொடுத்தாலும் விருப்பம் இல்லாத கணவனை மணந்த ஒரு பெண்ணின் இல்லற வாழ்க்கை பயனற்றதாகும்.*

*நறுமணம் கமழும் வாசனைப் பொருள்களை இனிது தேகத்தில் பூசிக்கொண்டாலும் அற்பத் தன்மையும் செருக்கும் உடைய ஒருவனின் தோழமை சிறுமையுடையதாக வெளியே சொல்லவும் மானமாகும்.*

பருப்பதம் – மலை, விருப்பம் – ஒருவரையொருவர் விரும்புதல், இல்லற வாழ்க்கையில் விருப்பம் உள்தாதல்.

**66. துன் மதியாளர்கள் சொற்களை ஏற்று நடப்பது துன்பத்தை விளைவிக்கும் என உரைத்தல்:**

பாடற்குறிப்பு: *ஒரு கிழப் புலி காட்டில் பசித்திருந்தது. அதற்கு உணவாக எந்த மிருகமும் அகப்படவில்லை. பாய்ந்து சென்று தாக்கித் தன் ஆகாரத்தைத் தேடிக் கொள்ளவும் அதற்குச் சக்தியில்லை. இவ்வாறு தனித்திருந்த புலியிடம் ஒரு நரி வந்தது. புலியின் தளர்ச்சியைக் கண்டு அது தன்னைத் தாக்கும் திறன் இல்லை என அறிந்து தைரியத்துடன் அருகில் சென்றது. அதைப் பார்த்த கிழப்புலி, "புத்திசாலித் தனத்தில் பெருமையுடன் திகழும் நரியே! என் உடல்*

அசையக் கூடப் பலமின்றி மிகவும் தளர்ந்திருக்கிறேன். எனக்கு ஏதேனும் ஆகாரத்திற்கு வழி செய்வது உனக்குத் தருமமாக இருக்கும்!" உதவி செய்வாயா!" எனக் கேட்டது. அதற்கு நரி இந்தக் காட்டில் நீண்ட காலமாக உன்னைப் பார்த்திருக்கிறேன். நான் உன் கடைவாய்ப் பல்லுக்குக் கூட உணவாக மாட்டேன் என்பதை எண்ணி என்னை இரக்கத்துடன் போகவிட்டாய். எனவே இப்போது உனக்கு உதவி செய்வது என் கடமை என்று கூறி வெளியேறிற்று. உடனே, வஞ்சனையுடைய அந்த நரி ஊர் ஓரத்தில் மேய்ந்து கொண்டிருந்த ஒரு பசுவிடம் சென்றது. "உனக்கு வீரம் பொருந்திய ஒரு நண்பனை அறிமுகப் படுத்துகிறேன். அவனுடைய நட்புக் கிடைத்தால் உனக்குப் பெருமையாக இருக்கும். உன்னைக் கட்டிப் போட்டுப் பால் கறக்கும் வீட்டாரும் உன்னைக் கண்டு அஞ்சுவார்கள். இப்போது என்னோடு வருகிறாயா?" என நரி கேட்டது. மூடப் பசுவும் நரியின் தந்திரச் சொற்களில் மயங்கி அதன் பின்னால் சென்றது. புதருக்குள் மறைந்திருந்த புலி இப்பசுவைக் கண்டதும் அடித்துத் தின்று பசியைத் தீர்த்துக் கொண்டது.

ஒருவருடைய சொற்களைக் கேட்டுச் செயல் படுவதும், நன்கு ஆராயாது நட்பைக் கொள்வதும் நாசத்தை விளைவிக்கும். துன்மதியாளர்களின் சொற்கள் துன்பத்தை விளைவிக்கும். எனவே பிறர் கூறும் சொற்களைக் கண்டு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இக்கருத்தை உணர்த்தும்வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

சொல்லுவார் வார்த்தை கேட்டுத்
தோழமை இகழ் வார் புல்லர்
வல்லவர் விசாரி யாமற்
செய்வாரோ நரி சொற் கேட்டு
வல்லியம் பசுவும் கூடி
மாண்ட தோர் கதையைப் போலப்
புல்லியர் ஒருவ ராலே
போகுமே யாவும் நாசம்.

**தெளிவுரை:** *பிறருடைய சொற்களைக் கேட்டுக் கொண்டு நீண்ட நாள் தோழமையை மறந்து இகழ்பவர் அறிவற்றவர்கள். அறிவில் மேம்பட்டவர்கள் நன்கு ஆராயாமல் ஒரு செயலைச் செய்யமாட்டார்கள். நரியின் சொல்லைக் கேட்டு ஒரு பசு மாண்டதைப் போன்று துன்மதியாளர்களுடைய சொல்லைக் கேட்டால் நாசமே உண்டாகும்.*

வல்லவர் – அறிவுடையவர். புல்லர் – அறிவற்றவர், தீயவர் வில்லியம் – புலி.

## 67. மூடரை மூடரே ஏத்திப் புகழ்வர்

**பாடற்குறிப்பு:** *கழுதையொன்று "ஆ...! கா...!" எனக் கத்தியது. அதைக் கேட்டதும் ஒரு பேய் மகிழ்ந்து அக்கழுதையைப் பார்த்து நன்றாகப் பாடுகின்றதாகப் பாராட்டிப் புகழ்ந்தது. இதனைக் கண்ட கழுதையும் தனக்கு நிகராக யாரும் இல்லை எனக் கருதி மேலும் கத்த ஆரம்பித்தது. இதனால் மூடத்தனத்தைப் பாராட்டுபவர்கள் மூடர்களேயாதலும், அதனால் மூடத் தன்மை மேலும் பெருகுவதற்குக் காரணமாதலையும் காணலாம்.*

இதனைச் சாற்றும் பாடல் இது.

**கலி நிலைத்துறை**

**கழுதை காவெனக் கண்டு நின்**
**றாடிய அலகை**
**தொழுது மீண்டு மக் கழுதையைத்**
**துதித்திட அதுதான்**
**பழுதி லாநமக்(கு) ஆர் நிக**
**ராம் எனப் பகர்தல்**
**முழுது மூடரை மூடர் கொண்**
**டாடிய முறை போல்**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

ஆர் நிகராம் – யார் நிகராகும்.

**68. அன்னதானம் செய்யாதவர்கள் மறுமையில் வறுமையில் ஓடு ஏந்தித் திரிவார்கள்:**

**பாடற்குறிப்பு:** மனிதராகப் பிறந்தவர்கள் ஏழை எளியவர்களுக்கு உதவி புரிய வேண்டும். பசித்தவர்களுக்கு அன்னதானம் புரிய வேண்டும். அதுவே நன்மையைத் தரும் பெருஞ் செயலாகும்.

ஒரு காலத்தில் இனிய மொழிபேசி மகிழ்விக்கும் மங்கையர் பொற்கலத்தில் பாற் சோறு கலந்து பரிவுடன் ஊட்ட வளர்ந்த ஒருவன், பெருமகனாகிப் பெருஞ்செல்வத்துடன் திகழ்பவனாக இருந்தான். ஆயினும் அவனுக்கு இரக்க உணர்வு இல்லை. யாருக்கும் அன்னதானம் செய்வதும் இல்லை. மகா லோபியாக இருந்தான். இவ்வாறு வாழ்க்கை நடத்திய அவன் தன் பிராரத்த வினை கழிந்தவுடன் இறந்தான். அன்னதானம் செய்து புண்ணிய பலனை

ஈட்டாததால் மறுமையில் ஏழ்மையில் வாடினான். மண்சட்டியைக் கையில் ஏந்தி நாய்கள் கவ்வுதற்குப் பின்னால் துரத்திவர, வீடு தோறும் ஏகி ஏக்கம் பெருகப் பிச்சை யேற்பவனானான்.

இதைப் பார்க்கும் போது, அந்தோ! பரிதாபம் மேலிடுகிறது.

இத்தன்மையினை எடுத்து இயம்புகின்றது இப்பாடல்.

**சந்த விருத்தம்**

**மண்ணார் சட்டி கரத் தேந்தி**
**மர நாய் கவ்வும் காலினராய்**
**அண்ணார்ந் தேங்கி யிருப்பாரை**
**அறிந் தோம் அறிந் தோம் அம்மம்மா**
**பண்ணார் மொழியார் பாலடிசில்**
**பைம் பொற் கலத்தில் பரிந்தூட்ட**
**உண்ணா நின்ற போ(து) ஒருவர்க்கு**
**உதவா மாந்தர் இவர் தாமே.**

**தெளிவுரை:** மண்சட்டியைக் கரத்தில் ஏந்தி நாய்கள் கவ்வுமாறு பின் தொடர்ந்து ஓடி வர ஏங்கி அலையும் இவர்கள் யாவர் என அறிந்து கொண்டோம். அந்தோ! பரிதாபம். ஒரு காலத்தில் பொன் கிண்ணத்தில் இனிய மாதர்கள் பாற்சோற்றைப் பரிந்து ஊட்ட வாழ்ந்தவர்கள், யாருக்கும் உதவி செய்யாத கருமிகளாய் வாழ்ந்ததனால் இப்போது வறுமையால் வாடுகின்றனர்.

மண்ணார் சட்டி – மண் சட்டி, பண்ணார் மொழியார் – இனிய மாதர், பாலடிசில் – பாற் சோறு.

## 69. தீயவர்களுக்குச் செய்யும் உதவி தீமையையே விளைவிக்கும்:

பாடற்குறிப்பு: காட்டில் புலியைக் கண்டு அஞ்சிய வேடன் ஒருவன் பக்கத்தில் இருந்த ஒரு மரத்தின் மீது ஏறினான். அந்த மரத்தில் ஏற்கெனவே பாதுகாப்பாக இருந்த குரங்கு ஒன்று அவ்வேடனுக்கு வழி விட்டுப் பாதுகாப்பும் செய்தது. அவனுக்குப் பசித்த போது உச்சிக் கிளைக்குத் தாவிச் சென்று கனிகளைப் பறித்துக் கொடுத்துப் பசியையும் ஆற்றியது.

நெடுநேரம் ஆகியும் மரத்தின் கீழே யிருந்த புலி நகரவில்லை. வேடன் இறங்கியவுடனே அவனைத் தனக்கு இரையாக்கிக் கொள்ள வேண்டும் என்னும் நினைப்பில் அவனை அச்சுறுத்திக் கொண்டிருந்தது. புலிக்கு இரை கிடைத்தால் அன்றித் தான் மீள முடியாது என்று கருதிய வேடன், தனக்கு உதவி செய்த குரங்கை மரத்திலிருந்து கீழே தள்ளிவிட்டான். புலி அக்குரங்கை அடித்துக் கொன்றது.

தீய குணம் உடையவர்களைப் பாதுகாத்து நன்மை செய்தால் தீமையே வரும். இதனை எடுத்தியம்புவது இப்பாடல்.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

**வல்லியம் தனைக் கண் டஞ்சி**
**மரந்தனில் ஏறும் வேடன்**
**கொல்லிய பசியைத் தீர்த்து**
**இரட்சித்த குரங் கைக் கொன்றான்**
**நல்லவன் றனக்குச் செய்ய**
**நலமது மிக்க தாகும்**

புல்லர்கள் தமக்குச் செய்தால்
உயிர்தனைப் போக்கு வாரே.

**தெளிவுரை:** புலியைக் கண்டு அஞ்சிய வேடன் ஒருவன் மரத்தின் மீது ஏற, அங்கிருந்த குரங்கு ஒன்று அவனையும் ஏற்று அவன் பசியையும் போக்கியது. ஆனால் அவ்வேடன் அக் குரங்கைப் புலிக்கு இரையாக்கி விட்டான். நல்லவர்களுக்கு உதவி செய்தால் நன்மையே விளையும். தீயவர்களைச் சேர்த்துக் கொண்டு உதவி செய்தால் அவர்கள் உயிரைப் போக்கும் தீங்கையும் செய்வார்கள்.

வல்லியம் – புலி.

## 70. கீழ் மக்கள் யாவர் என அடையாளம் காட்டுதல்:

**பாடற் குறிப்பு:** ஒருவன் தாய் தந்தையை நேசித்து அன்பு செலுத்த வேண்டும். பாவலர்களை அன்பு பாராட்டி அரும் பொருள்களை அறிந்து கொள்ள வேண்டும். அவர்களுக்கு நல்ல சன்மானங்களை அளிக்க வேண்டும். தன்னைத் தானே புகழ்ந்தும் தன்னுடைய குலமே சிறப்புடையது என வாதித்துக் கொண்டும் இருக்கக்கூடாது. மேலும் பொன் பொருள்களைச் சேர்ப்பது பிறர்க்குத் தானம் செய்வதற்கே எனவும் எண்ண வேண்டும். அழகிய மனைவி இல்லத்தில் இருக்கப் பொது மகளிரை விரும்பி நாடுதலும் கூடாது. இத்தகைய அற நெறிகளைப் பேணாதவர்கள் கீழ்மக்களாவார்கள். இக்கருத்துக்களை விளம்புவது இப்பாடல்.

## அறுசீர் ஆசிரிய விருத்தம்

தன்னைத்தான் புகழ்வோரும் தன்குலமே
பெரிதெனவே தான் சொல் வோரும்
பொன்னைத்தான் தேடியறம் புரியாமல்
அவை காத்துப் பொன்றி னோரும்
மின்னைப் போல் மனையாளை வீட்டில் வைத்து
வேசை சுகம் விரும்பு வோரும்
அன்னை பிதா பாவலரைப் பகைப் போரும்
அறமில்லாக் கசட ராமே.

**தெளிவுரை:** *தன்னைத்தானே புகழ்ந்து கொண்டு தற்புகழ்ச்சி பேசுபவர்களும், தன் குலமே உயர்ந்த தெனக் கொள்ளும் செருக்குடையவர்களும், பொன் பொருள்களைப் பிறர்க்குக் கொடுத்து அறம் புரியாத உலோபிகளும், அழகிய மனைவி இருக்க அவளை நீத்துப் பொதுமகளிரை நாடுபவர்களும், பெற்ற தாய் தந்தையைப் பகைத்துக் கொடுமை செய்பவர்களும், பாவலர்களுக்குத் தக்க சன்மானங்களை யளித்துப் பாராட்டாது குறை சொல்லிப் பகைமை பாராட்டுபவர்களும் அறநெறியில் வாழாதவர்களாய்க் கீழ்மக்களாய் உலகிடையே திரிபவர்களாவார்கள்.*

கசடர் – கீழ் மக்கள், இழிந்தோர்.

### 71. நியாயத்தை விட்டொழித்த கீழ்மக்களின் செயல்களைச் சுட்டிக் காட்டுதல்:

**பாடற் குறிப்பு:** *அறியாமையால் மயங்கி உறுதிப்பாடு இன்றி உள்ள மாதர்களின் அறிவற்ற சொற்களைக் கேட்டு அவ்வழியே ஒழுகுபவர்கள் பேயர்களுக்கு ஒப்பாவார்கள். அவர்களை மூடர்கள் எனவும்,*

வீரமில்லாத கோழைகள் எனவும், உலோபிகள் எனவும் உரைக்கலாம். இத்தகைய இழிவுடையவர் களைக் கணவனை இழந்து வருந்திக்கொழு கொம்பில்லாது வாடும் மாதர்களுக்கும் ஒப்பிட லாகாது. உலகத்தில் அறம் இன்னதென்று தெரியாத இவர்கள் நல்லுணர்வு அற்றவர்கள்; தம்மை அண்டியவர்களைக் கெடுத்து விடுவார்கள். அவர்களுடைய வாய்ச்சொல்லும் பிறர்க்கு அழிவைத் தரும். அவர்களுடைய அறிவும் பயனற்றதாகவே அமையும்.

கடுஞ் சொற்களால் சாடப் பெறும் கீழ் மக்களைக் குறித்து விளம்பும் பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**பெண்டுகள் சொற் கேட்கின்ற பேயரெனும்**
**குண மூடப் பேடி லோபர்**
**முண்டைகளுக் கிணையில்லா முனை வீரர்**
**புருட ரென மொழியொ ணாதே**
**உண்டுலக முதிர்ப் பாருள் கீர்த்தியறம்**
**இன்ன தென உணர்வே யில்லார்**
**அண்டினவர் தமைக் கெடுப்பார் அழிவழக்கே**
**செய்வதவர் அறிவு தானே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

**72. கீழ் மக்களைப் போற்றுபவர்கள் அறிவற்ற கீழ் மக்களே யாவர்:**

**பாடற் குறிப்பு:** அடக்கம் இல்லாதவர்களாய்க் கைகளை நீட்டிப் பேசுகின்ற கீழ்மக்களைக் கண்டு அறிவற்ற

கீழ்மக்கள் தம் சிரங்களை ஆட்டியும், கைகளைத் தட்டியும் மெச்சிப் பாராட்டுவார்கள். இத்தகைய செயல், குரங்கு நின்று கூத்தாடும் போது, அதன் அழகையும் அக்கூத்தாட்டத்தின் சிறப்பையும் கண்டு நாயானது போற்றிப் பாராட்டும் தன்மையில் தனது குரலால் ஓலமிடுவதைப் போன்றதாகும்.

இச்சிறுமையை விளக்கும் பாடல் இது.

**கலி நிலைத் துறை**

**குரங்கு நின்று கூத்தாடிய கோலத்தைக் கண்டே**
**அரங்கு முன்பு நாய் பாடிக்கொண்டாடியது போல்**
**கரங்கள் நீட்டியே பேசிய கசடரைக் கண்டு**
**சிரங்கள் ஆட்டியே மெச்சிடும் அறிவிலார் செய்கை.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. இத்தன்மையில் பாடல் என் 67-இல் உள்ளவாறும் காண்க.

கசடர் – கீழோர்.

## XII. பயனின்மை

### 73. தத்தமக்குரிய செயல்களைச் செய்யவில்லை யானால் பயனில்லை என உரைத்தல்:

**பாடற்குறிப்பு:** பெற்றெடுத்த பிள்ளையாயின் ஆபத்துக் காலத்தில் பெற்றோர்க்கும் மற்றும் உற்றோர்க்கும் உதவ வேண்டும். அவ்வாறு உதவாதவன் பயனற்றவன். பசியாக இருக்கும் வேளையில் உண்ணும் உணவானது பசியைத் தணிக்க வேண்டும். இல்லையென்றால் அதனை உணவாகக் கொள்ள முடியாது. தண்ணீர் தூய்மையாக இருந்து தாகத்தைத் தணிக்க வேண்டும்.

இல்லையெனில் அத் தண்ணீரால் பயனில்லை. குடும்பப் பெண் தன் குடும்பத்தில் செல்வ வளத்தையறிந்து நடக்க வேண்டும். குடும்பத்தின் நிலையை அறியாத நங்கையால் பயனில்லை. அரசன் ஆட்சி நடத்தும் காலத்தில் சினமின்றி இருக்க வேண்டும். சினத்தை அடக்காத வேந்தனாலும் குருவின் உபதேச மொழிகளை ஏற்று நடக்காத சீடனாலும் பயனில்லை. எத்தனை முறை ஆடி னாலும் புண்ணிய தீர்த்தம் ஒருவனின் பாவத்தைப் போக்கவில்லையானால், அத்தகைய தீர்த்தத்தால் யாதொரு பயனும் இல்லை.

இவ்வாறு ஒரு புதல்வன், உண்ணும் உணவு, குடிக்கும் தண்ணீர், வாழும் பெண்டிர், நாடாளும் வேந்தன், சீடன், புனித தீர்த்தம் ஆகிய ஏழும் அமைய வேண்டியவற்றை விளக்கும் பாடல் இது.

## அறு சீர் ஆசிரிய விருத்தம்

ஆபத்துக்கு உதவாப் பிள்ளை
அரும் பசிக்கு உதவா பிள்ளே
தாபத்தைத் தீராத் தண்ணீர்
தரித்திரம் அறியாப் பெண்டிர்
கோபத்தை அடக்கா வேந்தன்
குரு மொழி கொள்ளாச் சீடன்
பாபத்தைத் தீராத் தீர்த்தம்
பயனில்லை ஏழும் தானே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

தாபம் – தாகம், வேட்கை.

**74. தக்க சமயத்தில் உதவாத உறுப்புக்களை விளம்புதல்:**

பாடற் குறிப்பு: தன்னோடு பிறந்த தம்பியே தனக்குத் தக்க தருணத்தில் உதவ முடியும். உடன் பிறவாதவன் சகோதரனாக அன்பு பாராட்டினாலும் அவன் தன்னுடன் பிறந்தவனுக்கு உதவுகின்ற சூழ்நிலையில் இவனுக்குச் செய்கின்ற உதவி தடைப்படும்.

அதே போன்று தன்னைப் பெற்றெடுக்காதவர் களாய் இருந்தும் தாயார் தந்தையாரைப் போன்று பாது காத்தாலும் அவர்களால் உரிய நேரத்தில் உதவி புரியாத நிலையும் உண்டாகும். இது அவர்கள் தாம் பெற்ற புதல்வர்களுக்கு உதவும் நிலை ஏற்படின் பெறாத மக்கள் உதவி பெறுதல் தாமதப்படும் என்பதும் ஆகும். அதனைப் போன்று, வேறு ஒருவரிடம் உள்ள செலவமும் சொத்துக்களும் நமக்குத் தக்க நேரத்தில் உதவாது. பொது மகளிரின் அன்பும் மாற்றான் மனைவியுடன் கூடி வாழ்வதும் துன்பகாலத்தில் உதவியாகாது. அதுவே இன்னலைத் தருவதாகும். உண்மையான பொருளை நன்கு உணராத ஒருவனுக்கு ஏட்டில் எழுதப் பெற்றுள்ள கல்வியும் பயன்படாது.

இவ்வாறு, உடன்பிறவாத தம்பி, பெற்றெடுக்காத தாய் தந்தை, அன்னியரிடமுள்ள பொருட்செல்வம், வேசியின் அன்பு, பொருளை அறியாத நிலையில் ஏட்டில் இருக்கக்கூடிய அரிய வாசகம், மாற்றான் மனைவாழ்வு ஆகிய இந்த ஆறு தன்மைகளும் நெருக்கடியான துன்ப காலத்தில் உதவியாக இருப்பதில்லை. இதனை விளம்புகின்றது இப்பாடல்.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

தன்னுடன் பிறவாத் தம்பி
தனைப் பெறாத் தாயார் தந்தை
அன்னிய ரிடத்துச் செல்வம்
அரும் பொருள் வேசி யாசை
மன்னிய ஏட்டின் கல்வி
மறுமனை யாட்டி வாழ்க்கை
இன்னவாம் கருமம் ஆறும்
இடுக்கத்துக்கு உதவா தன்றே.

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை*

இடுக்கம் – துன்பம்.

**75. உயிர்க்கு ஆபத்தை விளைவிக்கும் ஆறு நிலைகளை உரைத்தல்:**

**பாடற் குறிப்பு:** *பாம்பைப் பிடித்து ஆட்டினால் அது அப்பாம்பாட்டியையே ஒரு நாள் சீறித் தாக்கும். யானையை விரட்டினால் அது வஞ்சம் கொண்டு யானைப் பாகனையே தாக்கும். இரவில் தனிமையாக நடந்து செல்லுதலும் அகன்று பரந்த ஏரி நீரில் நீந்திச் செல்லுதலும் உயிர்க்குப் பாதுகாப்பு ஆகாது. வேசியரை விரும்புவதும் நாடாளும் வேந்தரைப் பகைத்துக் கொள்வதும் பாதுகாப்பாகாது.*

*இத்தகைய ஆறு நிலைகளில் உயிர்க்குப் பாதுகாப்பின்னையை விளக்கும் பாடல் இது.*

அறு சீர் ஆசிரிய விருத்தம்

அரவினை ஆட்டு வாரும்
அருங்களிறு ஓட்டு வாரும்

இரவினில் தனிப்போ வாரும்
ஏரி நீர் நீந்து வாரும்
விரை செறி குழலி யான
வேசியை விரும்பு வாரும்
அரசனைப் பகைத்திட் டாரும்
ஆருயிர் இழப்பர் தாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

அரவு – பாம்பு. களிறு – யானை.

### 76. பயனில்லாத செருக்கு, புலனடக்கம், மௌனம் முதலானவற்றை விளம்புதல்:

**பாடற் குறிப்பு:** கல்வியின் தெளிவும் ஞானமும் ஒருவன் பெற்றிருப்பது உயர்வாகும். தெளிந்த அறிவில்லாதவனுடைய செருக்கும் வீரமும் ஒரு பொருளாக மதிக்கப்படுவதில்லை. பொருட்செல்வம் கொண்ட ஒருவனுடைய புலனடக்கமே சிறப்புடையதாகத் தோன்றும். வறியவனின் புலனடக்கம் ஏழைமையால் அமைவதேயன்றி உறுதிப் பாட்டினால் அமைவதாக உலகம் கருதுவதில்லை. அருள் தன்மையுடைய ஞானியின் மௌனம் பெருமையுடையதாகும். அத்தகைய அருளிச் செயல் இல்லையெனில் மௌனத்தால் தீமையே காண நேரிடும். இத்தன்மையில் தெளிவில்லாத மூடனின் செருக்கும், வறியவனின் புலனடக்கமும், அருட்பேறில்லாத மௌனமும் மலடி ஒருத்தியின் கற்புக்கு இணையெனக் கூறப்படும்.

இதனை விளக்கும் பாடல் வருமாறு:

### கலி விருத்தம்

தெருளிலாக் கலையினார் செருக்கும் ஆண்மையும்
பொருளிலா வறியர்தம் பொறிய டக்கமும்
அருளிலா வறியர்தம் மௌன நாசமும்
கருவிலா மங்கையர் கற்பும் ஒக்குமால்

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

தெருள் – கல்வியின் தெளிவு.

## 77. இத்தன்மைகள் இல்லையெனில் யாவும் சிறப்படையாது எனல்:

**பாடற் குறிப்பு:** *வானத்தில் சந்திரன் துலங்க வேண்டும். பொய்கையில் தாமரை மலர் பூத்திருக்க வேண்டும். நாடாளும் அரசனுக்கு மதி நிறை அமைச்சர் இருக்க வேண்டும். போர்ப் படை சிறப்புடன் விளங்க வேண்டுமானால் யானைகள் இருக்க வேண்டும். சபையில் அறிவு சான்ற புலவர்கள் இருக்க வேண்டும். இல்லற வாழ்க்கையில் புதல்வர்கள் இனிது புகழ் விளங்க இருத்தல் வேண்டும். வீணையின் இசை நன்கு விளங்க வேண்டுமானால் அது உறுதியான தந்திகளைக் கொண்டிருக்க வேண்டும். இவை இருந்தால் தான் யாவும் சிறப்படையும். இவை உரிய வகையில் இன்மையானது தனங்கள் இல்லாத மங்கையைப் போன்று அழகற்றதாகும்.*

*இதனை விளக்கும் பாடல் இது.*

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

சந்திரன் இல்லா வானம்
தாமரை இல்லைப் பொய்கை

மந்திரி இல்லா வேந்தன்
மதகரி இல்லாச் சேனை
சுந்தரப் புலவர் இல்லாத்
தொல் சபை சுதரில் வாழ்வு
தந்திகள் இல்லா வீணை
தனமிலா மங்கை போலாம்.

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

சுந்தரப் புலவர் = சுந்தரம் = அழகு. தமிழின் இனிமையை நன்கு உணர்த்தும் தன்மையில் புலவருக்கு அடைமொழியாயிற்று. சுதரில் = சுதர் இல்லாத. சுதர் = புதல்வர்கள்.

**78. தமது இயல்பான குணத்துடன் புன்மை செய்யும் தீயவர்கள் எத்தகைய கல்வியைக் கற்றாலும் நல்லவர்களாதல் இல்லை.**

பாடற் குறிப்பு: *அழுக்கும் புழுதியும் தூசுகளும் உள்ள பலரும் மிதித்து நடக்கும் இடத்தில் உயர்ந்தே கல் இருந்தாலும் அது ஒளி மேவித்திகழாது. பாம்புக்குப் பால் வார்த்தாலும் அது நஞ்சைத் தான் தரும். எவ்வளவு அன்பாகப் பழகினாலும் அதனால் நன்மை இருக்காது. வேப்ப மரத்துக்கு இனிமையான தேனை வார்த்து, வளர்த்தாலும் வேப்பிலையின் கசப்பு மாறாது. அதைப் போல, தீயவர்கள் அரிய பல நூல்களைக் கற்றாலும் அவர்கள் நற்குணச் சீலர்களாக மாற மாட்டார்கள்.*

*இக்கருத்தை உணர்த்தப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

அறு சீர் ஆசிரிய விருத்தம்

துப்பினில் புதைத்த கல்லும்
துகளின்றிச் சுடர்வி டாது

**பாம்புக்குப் பால் வார்த் தென்றும்**
**பழகினும் நன்மை தாரா**
**வேம்புக்குத் தேன் வார்த் தாலும்**
**வேப்பிலை கசப்பு மாறா**
**தாம் பல நூல் கற் றாலும்**
**துர்ச்சனர் நல்லோர் ஆகார்.**

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. (மற்றும் பாடல் எண் 39-ம் காண்க.)*

தூம்பு – உளை சேறு, துர்ச்சனர் – துன் மார்க்கர், தீயவர்கள்.

**79. நம்பிக்கைக்கு உரியவராக இல்லாதவர்களை அடையாளம் காட்டி விளக்குதல்.**

**பாடற் குறிப்பு:** *தெளிந்த கல்வி யறிவில்லாத மாந்தர், கடுங்கோபம் கொண்டு மேவும் அரசர், காலத்தை நன்கு தேர்ந்து ஆராய்ந்து தக்க ஆலோசனைகளைச் சொல்லாத அமைச்சர், உரிய காலத்தில் துன்பத்தைத் தீர்த்து நன்மையைப் பெருகச் செய்யாத தேவர், தேவதைகள், வேதங்களை நன்கு கற்றுணராத அந்தணர்கள், தன் கணவனோடு எக்காலமும் வல்லமை பேசி விட்டு நல்ல அடக்கம் உடையவள் போல அருகில் இருக்கும் மனைவி ஆகிய இவ் ஆறு வகையானவர்களை எக்காலத்திலும் நம்பிக்கைக்கு உரியவர்களாக எண்ணக் கூடாது. இவர்களிடம் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.*

*இக்கருத்தை விளக்குகின்ற பாடல் இது.*

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**கல்லாத மாந்தரையும் கடுங்கோபத்**
**துரைகளையும் காலந் தேர்ந்து**

சொல்லாத அமைச்சரையும் துயர்க்குதவாத
தேவரையும் சுருதி நூலில்
வல்லாவந் தணர்தமையும் கொண்டவனோடு
எந்நாளும் வலது பேசி
நல்லார் போல் அருகிருக்கும் மனைவியையும்
ஒரு நாளும் நம்பொ ணாதே.

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

துரை – நாடாளும் அரசன், சுருதி – வேதம், வல்லா – வல்லமையில்லாத – புலமையில்லாத.

## XIII. நிலை திரிதல்

### 80. வஞ்சனை செய்பவன் நரகத்தை அடைவான்:

பாடற் குறிப்பு: *துன்மதியுடைய மறையவன் ஒருவன் அந்நாட்டு மன்னன் மகளை அடைய விரும்பினான். அவளை ஏதேனும் ஒரு சூழ்ச்சி செய்து வெளியேற்றி விட்டுப் பின்னர் வேறு நாட்டிற்கு அழைத்துச் சென்று திருமணம் புரிந்து கொள்ள வேண்டுமெனக் கருதினான்.*

*ஒரு நாள் மன்னனிடம் அவனுக்குரிய கிரக அமைப்புக்களைப் பரிசோதித்துக் கொண்டிருக்கையில் அவன் மகள் பூப்பெய்திய காலம் தோஷம் உடையதாக இருப்பதால் அவளை வீட்டை விட்டு வெளியேற்றி விட வேண்டும் என்றான். அப் பிராமணனுடைய ஆலோசனையின் படி அப்பெண்ணை ஒரு பெட்டியில் வைத்து மூடி ஆற்றில் விடலாயிற்று. ஆற்றில் விடப்பட்ட பெட்டியைப் பின்னர் அரசனுக்குத் தெரியாமல் கைப்பற்றி வேற்று*

நாட்டிற்குச் சென்று அவளைத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தான் அம் மறையவன்.

இதற்கிடையில் ஆற்றில் மிதந்து வந்த பெட்டியை அண்டை நாட்டு அரசன் ஒருவன் கண்டு அதைக் கைப்பற்றி எடுத்தான். அரசகுமாரி உள்ளே இருப்பதைக் கண்டு வியந்தான். அவள், பிராமணன் ஒருவனின் வஞ்சனையும் தன் தந்தையின் செயலையும் கூறிப் புலம்பினாள். அவ்வரசன் அவளைக் காப்பாற்றி வேட்டையில் அகப்பட்ட புலியை அப்பெட்டியில் போட்டு மூடி ஆற்றில் விட்டு விட்டான்.

துன் மதியுடைய பிராமணன் ஆற்றில் மிதந்து சென்ற பெட்டியைக் கைப்பற்றித் திறக்கவும் அதற்குள் அடைக்கப் பட்டிருந்த புலி அவனை அடித்துக் கொன்று காட்டுக்குள் மறைந்துவிட்டது. வஞ்சனை யாகச் செயல்பட்ட மறையவன் நரகத்தை அடைந்தான்.

இக்கதையை விளக்கும் தன்மையில் பாடிய பாடல் இது.

## அறு சீர் ஆசிரிய விருத்தம்

மதியிலா மறையோன் மன்னன்
மடந்தையை வேட்கை யாலே
ருது வது காலந் தன்னில்
தோஷ மென் றுரைத்தே ஆற்றில்
புதுமையாய் எடுத்த போது
பெட்டியில் புலிவா யாலே
அதிருடன் கடியுண் டன்றே
அரு நரகு அடைந்தான் மாதோ.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பில் உள்ளவாறும் நோக்குக.

ருது – மகளிரின் பூப்பு அடையும் தன்மை.

## 81. வறட்டுத் துணிவால் வாழ்விழந்த ஆடு:

**பாடற்குறிப்பு:** ஒரு ஆடு சாயத் தொட்டியில் விழுந்ததால் அதன் வண்ணம் பச்சையாயிற்று. இந்த வண்ணத்தைக் கண்ட மற்ற ஆடுகள் எல்லாம் அஞ்சி ஓடின. பச்சை வண்ணத்தையுடைய ஆடு, தான் அதிக பலம் பெற்றுவிட்டதாக நினைத்தது. தானே காட்டுக்கு ராஜாவாகி விட வேண்டும் என்று கருதிப் புலி வாழும் குகைக்குள் சென்றது. புதுமையான வண்ணத்தைக் கண்ட புலி அஞ்சி ஓடியது. ஆடு விடாது துரத்திச் செல்லும் போது, எதிரில் வந்த நரியொன்று புலியைப் பார்த்து "நீ ஏன் அஞ்சுகின்றாய்; அந்த புதுமையான விலங்குடன் நின்று சண்டையிட்டுப் பார் உண்மை தெரிந்து விடும்" என்றது. சற்று நேரத்தில் புலியும் அவ்வாட்டை அடித்துக் கொன்றது.

வறட்டுத் துணிவைக் காட்டும்வகையால் அழிவு உண்டாகும் எனக் கூறும் இக்கருத்து புலவர் ஒருவரால் பாடலாக அமைவதாயிற்று. இது அப்பாடல்.

அறு சீர் அசிரிய விருத்தம்

மையது வல்லி யம் வாழ்
மலைக் குகை தனிற்பு குந்தே
ஐயமும் புலிக்குக் காட்டி
அடவியில் துரத்துங் காலை
பையவே நரிக் கோ ளாலே
படுபொருள் உணரப் பட்ட

வெய்ய அம் மிருகம் தானே
கொன்றிட வீழ்ந்த தன்றே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ள வாறும் காண்க.

மை – ஆடு, வல்லியம் – புலி, அடவி – காடு.

## 81. மங்கையர் சொல்லைக் கேட்டுத் துன்புற்றவர் களை உரைத்தல்:

**பாடற்குறிப்பு:** கைகேயியின் சொல்லைக் கேட்டு மன்னர்களால் புகழப்படும் தசரதன் மரண மானான். கானகத்தில் சீதாப் பிராட்டியாரின் சொற்கேட்டு மானைத் தொடர்ந்து சென்ற இராமபிரான் பல துன்பங்களை அடைந்து வருந்தினான். தனது. தங்கையாகிய சூர்ப்பணகையின் சொற்கேட்டுச் சீதாப் பிராட்டியின் மீது காதல் கொண்ட இராவனன் தன் சுற்றத்துடன் மாண்டான். இவ்வாறு பெண்களின் சொற்களைக் கேட்டு நடப்பவர்கள் துன்பம் அடைந்தனர் எனக் காணும் போது உலகோர் நகைப்பர் அல்லவா!

இக்கருத்தைப் பாடலாக அமைத்த புலவர் ஒருவரின் பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

மங்கை கைகேயி சொற் கேட்டு மன்னர் புகழ்
தசரதனும் மரண மானான்
செங்கமலச் சீதை சொல்லை சீ ராமன்
கேட்டவுடன் சென்றான் மான்பின்
தங்கையவள் சொற் கேட்ட இராவணனும்
கிளையோடு தானும் மாண்டான்

**நங்கையற் சொற் கேட்பதெல்லாம் கேடு வரும்**
**பேருல கோர் நகைப்பர் தாமே.**

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

செங்கமலச் சீதை – செந்தாமரை மலரில் விளங்குகின்ற திருமகளின் அம்சம் என்பது குறிப்பு. கிளை – சுற்றம்.

## 83. நாட்டைப் பகையாக்கி வெளியேற்றுதல்:

**பாடற்குறிப்பு:** *இருவர் நண்பர்களாக விளங்கி வந்தனர். அவர்களைப் பிரிக்க வேண்டும் என்பதற்காக ஒருவர் மற்றொருவரை அவமதிப்பதாகக் கோள் சொல்ல இரு நண்பர்களும் பிரிந்து ஒருவர்க்கொருவர் பகையாயினர். தன் மகளோடு பிரியாது கூடிக்குலாவி வந்த வேதியன் ஒருவனின் முகத்தில் பச்சைக் கஸ்தூரியை வைத்து ஊதிய ஒரு வேசியின் கதையைப் போன்றதாகும்.*

*இக்கருத்தில் அமையப் பெற்ற பாடல் இது.*

**அறு சீரடி ஆசிரிய விருத்தம்**

**ஆதியாம் இருவர் நட்புக்(கு)**
**அவ மதிப் புற்ற வர்க்குள்**
**சூதினால் கபடம் செய்து**
**துணைபிரித் திடுவர் என்றால்**
**வேதியன் பவள வாயில்**
**வேசை தாய்ப் பச்சை நாவி**
**ஊதிய கதைபோ லாகி**
**உரு நரகு எய்து வாரே.**

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

ஆது – வஞ்சனை, நாவி – கஸ்தூரி, நரகு எய்தல் – துன்பத்தில் ஆழ்தல்.

## 84. உள்ளன்பு இல்லாத நட்பு துன்பத்தையே விளைவிக்கும்:

**பாடற்குறிப்பு:** நண்பர் என்றால் நட்பின் பெருமை யையும் அதன் பயனையும் நன்கு அறிந்து கொள்ளுதல் வெண்டும். உள்ளத்தால் ஒன்று பட்டு உடல் இரண்டு உள்ளம் ஒன்று என்பதைப் போன்று இருத்தல் வேண்டும். ஒவ்வொருவரின் அருமை பெருமையையும் உணர்தல் வேண்டும். அப்போது தான் இனிமையான நட்பு மலரும். இதனை "புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சி தான் நட்பாம் கிழமை தரும்" என்னும் திருக்குறளும் பகரும். மகாபாரதக் கதையில் உள்ள சகுனியைப் போன்று பண்பற்றவர்களின் நட்பால் துன்பமே நிகழும். இக்கருத்தை விளக்கும் பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**அருமையும் பெருமை தானும்**
**அறிந்துடன் படுவோர் தம்மால்**
**இருமையும் ஒருமை யாகி**
**இன்புறற் கேது வுண்டாம்**
**பரிவிலாச் சகுனி போலப்**
**பண்புகெட் டவர்கள் தம்மால்**
**ஒருமையில் நிரய மெய்தும்**
**ஏதுவே உயரும் மன்னோ.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

இருமை – இருவர் உள்ளம், ஏது – காரணம்.

## 85. தாமரையை மரலச் செய்யும் சூரியனே அதை வாடச் செய்யும்:

**பாடற்குறிப்பு:** சங்கு போன்று வெண்மை வண்ணம் கொண்டு அழகுடன் மேவும் வெண்தாமரை மலருக்குத் தண்ணீர் தாயாகவும் சூரியன் தந்தையாகவும் இருந்து நன்கு மலரச் செய்யும். அத்தாமரை மலரைப் பறித்து விட்டால் தாயாக இருந்து பாதுகாத்த அப்பொய்கையில் உள்ள தண்ணீரே அதனை அழுகச் செய்து விடும். அம் மலரைப் பறித்துக் குளக்கரையில் போட்டால் தந்தையாகியிருந்து மலரச் செய்த சூரியனே தன்னுடைய வெங்கதிர்களால் காய்ந்து வாடச் செய்து விடும். ஒருவர் தன் இயல்பான நிலையில் இருந்தாலன்றி சிறப்படைய முடியாது. இக்கருத்தை வெளியிடும் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீரடி ஆசிரிய விருத்தம்

சங்குவெண் தாம ரைக்குத்
தந்தையாய் இரவி தண்ணீர்
அங்கதைக் கொய்து விட்டால்
அழுகச் செய்(து) அந்நீர் கொல்லும்
துங்கவன் கரையிற் போட்டால்
சூரியன் காய்ந்து கொல்வான்
தங்களின் நிலைமை கெட்டால்
இப்படித் தயங்கு வாரே

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. இத்தன்மையில் பாடல் எண் 48-இல் உரைத்தவாறும் காண்க. மற்றும்

"தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை." (குறள் 964)

எனச் சாற்றும் திருக்குறளையும் நோக்குக.

சங்கு – வெண்மையைச் சுட்டுதலாம், துங்வன் கரை – உயர்ந்த வலிமையான பொய்கையின் கரை. (தூங்கம் – உயர்ந்த) தயங்குதல் – வாடுதல், வருந்துதல்.

## 86. வறுமையில் விளைந்த விநோதம்:

**பாடற்குறிப்பு:** ஒருவன் தன் தாய் தந்தையுடைய பாதுகாப்பில் வாழ்ந்து வந்தான். இவன் கல்வியறிவைப் பெறவில்லை. தந்தையின் சொற்களைக் கேட்டுப் பயிலவும் இல்லை. இவன் வளர்ந்ததும் இவன் பெற்றோர் இவனுக்குத் திருமணம் செய்து வைத்தனர். இவனும் பணியேதுமின்றித் தாய் தந்தையரின் உழைப்பிலேயே காலத்தைக் கழித்து வந்தான்.

**"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்**
**பெருமை உடைத்து இவ் வுலகு."** (குறள் 336)

என்னும் திருக்குறளுக்கு ஏற்ப இவன் பெற்றோர் உயிர் துறந்தனர். இவனுக்கு எத்தொழிலும் தெரியாது. தாய் தந்தையர் பாடுபட்டுச் சேர்த்து வைத்திருந்த பொருள்களை யெல்லாம் செலவிட்டுச் சிறிது காலம் வாழ்ந்தான். சில நாட்களில் அவையும் தீர்ந்தன. இவன் வறுமையால் வாடினான். ஊர் மத்தியில் சென்று பெருமக்களுடன் பழகுவதற்கு நாணம் கொண்டான். விருந்தினர் யாரேனும் வந்தாலும் அவர்களை உபசரிக்க இயலாதவனாகி வெட்கித் தலை குனிந்தான். தன் மனைவியைக் கண்டாலும் அவள் என்ன மொழிவாளோ என எண்ணி அச்சம் கொண்டான். தீயவர்கள் சிலர் இவனைப் பொய் சாட்சி சொல்லுமாறு அச்சுறுத்த அதற்கும் இணங்கினான்.

தன்னுடைய சுய அறிவும் நாளுக்கு நாள் குறையத் தொடங்கியது. உலகத்தார் பழிக்கு ஆளாகி நைந்தான்.

இத்தகைய ஒருவனைக் கண்ட புலவர் பாடிய பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**தாங்கொணா வறுமை வந்தால்**
**சபைதனில் செல்ல நாணும்**
**வேங்கைபோல் வீரம் குன்றும்**
**விருந்தினர் காண நாணும்**
**பூங்கொடி மனையாட்(கு) அஞ்சும்**
**புல்லருக்கு இணங்கச் செய்யும்**
**ஓங்கிய அறிவு குன்றி**
**உலகெலாம் பழிக்கும் தானே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பில் உள்ளவாறும் காண்க.

## 87. மானிட இன்பமும் ஊழ்வினையும்

**பாடற்குறிப்பு:** ஒருவன் இனிமையாக வாழும் காலத்தில் அதனையே பெருஞ்சுகமாகக் கருதாது இயல்பான வாழ்க்கையைக் கொண்டு புலனடக்கத்துடன் வாழ்ந்தால் அவன் தாழ்ச்சியுற்ற காலத்தில் தன்னிலைமை திரியாதவனாகித் தளர்ச்சியடையாது வாழ்பவனாவான். இதன் தன்மையை,

**"இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்**
**துன்பம் உறுதல் இலன்."** **(குறள் 629)**

என்னும் திருக்குறள் உணர்த்துவதாகும். ஒருவன் ஊழ்வினையின் தாக்கத்தால் துன்பத்தை அடைய

நேரிட்டால் அதனை மாற்றுவதற்கு இயலுமோ! தீமையை விளைவித்தற்கு மாறாக நல்லூழ் எனப்படும் நல்வினையின் பயனாக ஏழையாக இருந்தவர்கள் பல்லக்கில் ஏறிப்பெருமையும் சிறப்பும் விளங்கத் திகழ்தலைக் காணவில்லையோ!

இக்கருத்தை உள்ளத்தே கொண்ட புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**வாழ்வது வந்த போது**
**மனந்தனில் மகிழ வேண்டாம்**
**தாழ்வது வந்த தானால்**
**தளர்வரோ தக்கோர் மிக்க**
**ஊழ்வினை வந்த தானால்**
**ஒருவரால் விலக்கப் போமோ**
**ஏழையாய் இருந்தோர் பல்லக்(கு)**
**ஏறுதல் கண்டி லீரோ.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. மற்றும் பாடற்குறிப்பில் உள்ளவாறும் காண்க.

தீய வினையை ஊழ்வினையெனவும், அதனால் துன்பம் விளையும் எனவும் இப்பாட்டின் மூன்றாம் அடியில் உணர்த்துவதாயிற்று. இதனைப் போகூழ் எனத் திருக்குறள் பாடல் வாயிலாக உணர்த்துதல் காண்க. நன்மையின் பயனை முயற்சியால் அடைதலும் அது நல்வினை, நல்லூழ் என ஓதப் பெறுதலும் ஆகும். இதனை "ஆ கூழ்" எனத் திருக்குறள் சாற்றுகின்றது.

"ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போ கூழால் தோன்றும் மடி." (குறள் 371)

(அசைவு, மடி – சோம்பலை உணர்த்தும், அசைவின் மை – முயற்சி.)

என்பது திருக்குறள் ஊழின் வலிமையை,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தாந்முந் துறும்." (குறள் 380)

என்னும் திருக்குறளாலும்

நல்லூழின் வலிமையால் ஒருவன் சிறப்படைதலை,

"அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை
பொறுத் தானோடு ஊர்ந்தான் இடை." (குறள் 37)

என்னும் திருக்குறளாலும் நோக்குக.

**88. பெருஞ் செல்வமே வியாதியாகி விடும். அதற்கு மருந்து தரித்திரமே எனல்:**

பாடற்குறிப்பு: செல்வந்தன் ஒருவன் தன் புதல்வனைச் சீரும் சிறப்புமாக வளர்த்து வந்தான். அவன் பன்னீரில் நீராடினான். வெள்ளிக் கட்டிலில் பட்டுப் பீதாம்பரத்தால் ஆன மெத்தையில் நித்திரை செய்தான். தங்க ஆபரணங்கள் பளபளக்க உலவி வந்தான். அவனுடைய செல்வச் செருக்கு அவனுக்குப் புன்மைக் குணம் உடையவர்களையே தோழர்களாக்கி வைத்தது. தந்தையால் அப்புதல்வனைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

தந்தைக்குப்பின் இவன் செருக்கு மேலும் பெருகியது. தீய வழிகளில் செலவுகளைச் செய்தும் மது

பானங்களை அருந்தியும் பொதுமகளிரை நாடியும், நல்லோர்களை அவமதித்தும் தெய்வ நிந்தனை புரிந்தும், நல்விரதங்களைத் துறந்தும், ஏழை எளியவர்களை வாட்டி வதைத்துத் துன்புறுத்தியும் வந்தான். நாளடைவில் அவனுடைய தேகத்தில் பிணி கண்டது. எத்தகைய மருத்துவத்தாலும் நோயைத் தீர்க்க முடியவில்லை. நாளடைவில் அவனுடைய செல்வமும் கரைந்து, அவனைத் தரித்திரம் முழுமையாக ஆட் கொண்டு விட்டது. இந்நிலையில் அவனுடன் தோழமை கொண்டவர்கள் அவனை விட்டு நீங்கினர். அவன் உண்ண உணவின்றி வாடினான். உடுப்பதற்கும் சரியான உடையில்லை. மரத்தடியில் வாழும் நிலையையும் அடைந்தான். அவனுடைய இரத்தம் சுண்டியது. அவன் தேகத்தில் மலிந்து ஊறிய துர் நீரும் வற்றியது. அவனுடை தரித்திர நிலையே அவன் பிணிக்கு மருந்தாக இருந்தது. இதனை ஒரு புலவர் கண்டு பாடிய பாடல் இது.

**கலி விருத்தம்**

**பெருத்திடு செல்வமாம் பிணிவந் துற்றிடில்**
**உருத்தெரி யாமலே ஒளிம ழுங்கிடும்**
**மருத்துள தோவெனில் வாக டத்திலை**
**தரித்திரம் என்னுமோர் மருந்தில் தீருமே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பும் காண்க.

இப்பாட்டில் பெருந்தீனியால் நேரும் பிணியானது உணர்த்தப்பட்டது. இதனை,

**"இழிவறிந்து உண்பான்காண் இன்பம் போல் நிற்கும்
கழிபேர் இரையான் கண் நோய்." (குறள் 946)**

என்னும் திருக்குறளாலும் காண்க.

இரை – உணவு. இழிவின் தன்மையையும் உணர்த்திற்று. செல்வமாம் பிணி – செல்வச் செருக்கு, வாகடம் – மருத்துவநூல்.

**89. ஒருவன் தான் இருக்கின்ற இடத்தால் பெறுகின்ற வலிமையினை உரைத்தல்:**

பாடற்குறிப்பு: ஒவ்வொருவருக்கும் தனது இயல்பான இடத்தில் உள்ள போது மேவும் வலிமை வேற்றிடத்திற்குச் சென்றால் இருப்பதில்லை. வலிமையான ஒரு யானையைத் தண்ணீரில் இருக்கும் முதலை வெற்றி கொள்ளும். தண்ணீருக்குள் இருக்கும் போது பெற்றிருக்கும் ஆற்றலை அம்முதலை, தண்ணீரைவிட்டுக் கரையில் வந்தால் வலிமை யில்லாத ஒரு பூனையைப் பிடிக்கவும் திறனற்றதாகி விடும். இதனை,

**"நெடும் புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற." (குறள் 495)**

என்னும் திருக்குறள் சாற்றும். அதனைப் போன்று அரசனும் அவனது படைகளும் அவ்வவ் விடங்களை விட்டு வெளியே செல்வாராகளாகில் தளர்ச்சியுற்று வாடுவார்கள்.

இக்கருத்தை வலியுறுத்துவது இப்பாடல்.

**கலி விருத்தம்**

**யானையைச் சலந்தனில் இழுத்த அக்கரா
பூனையைக் கரைதனில் பிடிக்கப் போகுமோ**

**தானையும் தலைவரும் தலம் விட்(டு) ஏகினால்
சேனையும் செல்வமும் திரங்கு வார்களே.**

*குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.*

சலம் = தண்ணீர், கரா = முதலை, தலைவர் = அரசர், தலம் = தமது சொந்த இடம், திரங்குதல் = சுருங்குதல், தளர்தல்.

## 90. பெருமை மிக்கவர்களுடைய செயல்களை வியந்து ஏத்துதல்!

பாடற்குறிப்பு: *ஒரு வில் வளைந்துள்ளதென்று கருதி அதனைச் சாதாரணமாகக் கொள்ளக்கூடாது. அதன் வழியாகக் கொடிய அம்புகளைத் தொடுத்து எதிரிகளை அழிக்க முடியும். தவிரவும் வில்லின் நாண் அறுபடுமானால் அது நிமிர்ந்து, நொடியில் வில்லைக் கையில் ஏந்தியுள்ளவனையும் அழித்து விடும். மற்றும் யானையும் புலியும் செயலற்று உறங்கிக் கொண்டிருப்பதாகவும் எண்ணக் கூடாது. தான் வளர்த்த ஆட்டுக் கடாவும் ஒருவனைப் பாய்ந்து தாக்கக்கூடும். அவ் ஆடு தன் கால்களைப் பின்னுக்கு இழுப்பதால் பின்வாங்கிவிட்ட தாகக் கொள்ளக் கூடாது. தீயவர்கள் சொல்லும் புன்சொற்களைக் கேட்டு அறிவின் மிக்க பெருமக்கள் அச்சம் கொண்டு பணிந்து விட்டதாகக் கொள்ளுதலாகாது. பெரியவர்களைத் தீய சொற்களால் பேசி ஒருவன் உயிர் பிழைத்து வாழ முடியாது. இதனை*

**"எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்."** (குறள் 896)

*எனச் சாற்றும் திருக்குறளாலும் காண்க.*

இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### அறு சீர் ஆசிரிய விருத்தம்

வில்லது வளைந்த தென்றும்
வேழம துறங்கிற் றென்றும்
வல்லியம் தூங்கிற் றென்றும்
வளர்கடா பிந்திற் றென்றும்
புல்லர்தம் சொல்லுக் கஞ்சிப்
பொறுத்தனர் பெரியோர் என்றும்
நல்லதென் றிருக்க வேண்டாம்
நஞ்செனக் கருத லாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க. வளைந்த வில்லும், தூங்கும் புலியும் யானையும், பின்னால் செல்லும் ஆட்டுக்கிடாவும் தீயவர்களின் புன்சொற்களைக் கேட்டுப் பொறுமையுடன் மேவும் பெரியார்களும் தோற்றத்தால் அமைதியாக இருப்பதன்றிச் செயல் பாட்டில் கொடிய நஞ்சு போன்று கடுமையை விளைவிக்கும் என்பதாகும்.

வல்லியம் = புலி, வேழம் = யானை, கிடா = ஆட்டுக்கிடா

## 91. உயிரைக் காக்கும் நல்ல நட்பை விளம்புதல்:

பாடற்குறிப்பு: ஒரு காட்டில் ஒரு மான், ஆமை, எலி, காகம் ஆகிய நான்கும் நல்ல நண்பர்களாய் இருந்து இணைபிரியாது வாழ்ந்தன. ஆமை ஒரு குளத்தில் இருந்தது. காகம் குளத்தின் கரையிலிருந்த ஒரு மரத்தின் கிளையில் தங்கி வசித்தது. எலி, அந்த மரத்தின் கீழ் இருந்த வளை ஒன்றில் இருந்தது. மான்

அதன் பக்கமாக இருக்கும் சோலையில் இருந்து வந்தது.

ஒரு சமயம் மான் சற்றுத் தொலைவில் சென்று இரைதேடச் சென்றது. காகமும் வெளியே பறந்து சென்றிருந்தது. குளத்தில் இருந்த ஆமை தனது நண்பர்களைக் காண வேண்டுமென்று வெளியே வரும் போது வேடன் ஒருவன் வலைவிரித்து அந்த ஆமையைப் பிடித்துக் கொண்டு சென்றான். ஆமை தான் வேடனிடம் சிக்கிக் கொண்டதை எண்ணிக் கவலையுற்றது. வெளியே சென்ற காகம் திரும்பியவுடன் ஆமையைக் காணாது கவலையுடன் தேடியது. அதை வேடன் ஒருவன் பிடித்துச் செல்வதைக் கண்டு தன் தோழர்களான எலியையும் மானையும் அழைத்து வந்தது. இம் மூன்றும், வேடனைத் தம் வலிமையால் வெல்ல முடியாது எனத் தீர்மானித்து ஏதேனும் உபாயம் செய்து ஆமையைக் காப்பாற்ற முனைந்தன.

வேடன் செல்லும் வழியில் மான் செத்து விட்டது போல் பாசாங்கு செய்து படுத்துக் கொண்டது. அதைக் கண்ட வேடன் தலையில் சுமந்திருந்த வலையைக் கீழே எடுத்து வைத்துவிட்டு, மானைத் தன் தோளின் மீது தூக்கிக்கொள்ள எத்தனித்தான். வேடன் மானின் அருகில் செல்லும் வேளையில் எலி வேடனின் வலையைத் தன் பற்களால் கடித்து ஆமையை மீட்டுவிட்டது. மானைத் தூக்குவதற்கு முனைந்தவுடன் அது துள்ளிக் குதித்து ஓடித் தப்பித்துச் சென்றது. தான் வேடன்

வலையிலிருந்து மீட்பதற்காகக் காகம் மானையும் எலியையும் அழைத்து வந்ததற்கும் எலி வலையைக் கத்தரித்துத் தன்னை விடுவித்ததற்கும் மான், வேடன் கையிலிருந்த வலையை கீழே வைக்கச் செய்யப் புரிந்த தந்திரத்திற்கும் ஆமை நன்றியைத் தெரிவித்துக் கொண்டது. அஃறிணைப் பொருள்களாயினும் நட்பின் திறத்தால் வேடனை வெற்றி கொண்ட செயல் வியப்புக்குரியதல்லவா!

இவ்வாறு சிந்தித்த புலவர் ஒருவரின் வாயிலாக எழுந்த பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**சலந்தனிற் கிடக்கும் ஆமை**
**சலத்தைவிட் டகன்ற போது**
**கொலைபுரி வேடன் கண்டு**
**கூறையில் கொண்டு செல்ல**
**வலுவினால் அவனை வெல்ல**
**வகையொன்றும் இல்லை யென்றே**
**கலைஎலி காகம் செய்த**
**கதையென விளம்பு வோமே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க. இப்பாட்டில், ஐயறிவுள்ள விலங்கு மற்றும் பறவைகளின் நட்பின் பெருமையை இதன் வாயிலாக உணர்த்தி ஆறறிவுடைய விலங்கு மாந்தரின் செயலுக்கு அடித்தளமாக ஓதப் பெற்றமை காண்க.

சலம் – தண்ணீர், கூறை – வலை, கலை – மான்.

92. நற்குணத்தை யுடையவனால் பெரும் புகழும் தீய குணத்தையுடையவனால் இழிவும் உண்டாகும்:

பாடற்குறிப்பு: "தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று." என்னும் திருக்குறள் கருத்து இவண் சாற்றப்படுவதாம். ஒரு குலத்தில் நற்குணப் பாங்கும் சீலமும் உடைய ஒருவன் பெருமை விளங்கத் திகழ் வானாயின் அவனால் அவன் குலத்திற்கும் ஊருக்கும் நாட்டிற்கும் பெருமை தோன்றும். அவன் புகழ் சந்தனம் போல எல்லா இடங்களிலும் இனிது பரவி இனிமையை உண்டாக்கும்.

கயமைக் குணமுடைய ஒருவன் இருப்பானாகில் அவனால் நாடும் பாழாகும். குலத்திற்கும் இழிவுண்டாகும். அவன் தன் குலத்திற்கும் தீமை விளையுமாறு செய்வான். அது இரும்புக் கோடாரியில் பொருத்தப்பட்ட கொம்பு மற்ற மரங்களாகிய தம் இனத்தையே வெட்டிக் கெடுதி செய்வதை ஒக்கும். இக்கருத்தைக் கொண்டு புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

நிலமதிற் குணவான் தோன்றின்
நீள்குடித் தனரும் வாழ்வார்
தலமெலாம் வாசம் தோன்றும்
சந்தன மரத்திற் கொப்பாம்
நலமிலாக் கயவன் தோன்றின்
குடித்தனம் தேசம் பாழாம்
குலமெலாம் பழுது செய்யும்
கோடாரிக் காம்பு நேராம்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

நேராம் – ஒப்புமையாகும்.

## 93. பாது காவலாக இருக்க வேண்டியவர்கள் துன்பம் செய்யலாகாது:

**பாடற்குறிப்பு:** பண்டைக் காலத்தில் ஆறில் ஒரு பங்கு வரியாக மக்கள் செலுத்திவந்தனர். பாண்டியன் அறிவுடை நம்பியின் ஆட்சியின் போது ஒரு சமயம் மக்களின் வரிப்பணத்தைப் பெறுகின்ற அரசுத் தண்டலர்கள் முறைதவறிச் செயல்பட்டனர்; வறியவர்களைத் தண்டிக்கவும் செயல் பட்டனர். இச்செயல் அரசனுடைய கவனத்திற்குச் செல்ல வில்லை. பிசிராந்தையார் என்னும் புலவர் மன்னனிடம் சென்றார். புலவரைக் கண்ட புரவலன் மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தான். ஆயினும் அரசனின் ஏவலர்களால் தமிழ் மக்கள் அடைந்த துன்பமானது புலவரின் உள்ளத்தை அரித்துக் கொண்டிருந்தது. அரசனின் அன்பு மொழிகள் அவருடைய செவிக்கு ஏறவில்லை. எனவே அப்புலவர் வேந்தன் முன்னே நின்று, "வேந்தே! ஒரு யானைக்கு உணவிட வேண்டுமென்று எண்ணி அதனை அவிழ்த்து விட்டால் அது வயலில் சென்று தன் விருப்பப்படி உண்பதை விட, அதன் காலில் மிதிப்பட்டுப் பாழாகும் உணவுப் பொருள் அதிகமாகும். அவற்றையே கவளமாக்கி அவ் யானைக்குக் கொடுத்தால் அவ்வுணவு பல நாட்களுக்குப் பயன்படும்" என உரைத்தார். அரசன் உண்மையை ஓர்ந்து, தக்கவாறு நிர்வாகத்தைச் செம்மைப் படுத்திப் புலவருரையும் சிறப்பித்தான்.

இத்தன்மையில் பாதுகாவலாக இருப்பவர்கள் பிறர் துன்புறுவதற்குக் காரணமாக இருக்கக் கூடாது என்னும் கருத்தை வலியுறுத்தும் வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**கலி நிலைத் துறை**

**வேலி யானது பயிர்களை**
**மேய்ந்திட விதித்தால்**
**கால னானவன் உயிர்தனைக்**
**கவர் ந்திட நினைத்தால்**
**ஆலம் அன்னையர் பால்தரக்**
**கருதுவா ரானால்**
**மேலி(து) ஓர்ந்துடன் யார்கொலோ**
**விலக்குவர் வேந்தே.**

**தெளிவுரை:** வேலி பயிர்களுக்குப் பாதுகாப்பாக இருக்கவேண்டும். பயிரின் அழிவுக்கு வேலி காரணமாகக் கூடாது. அவரவர்களுடைய பிராரத்த வினை முடிந்து முதிர்ந்த வயதில் காலன் உயிர்களைக் கொண்டு செல்ல வேண்டுமேயன்றி அவன் உயிரைக் கவரும் அதிகாரத்தைக் கொண்டுள்ளதால் தன்னிச்சையாகச் செயல்படக் கூடாது. தாய்மார்கள் தம் குழந்தைகளுக்குத் தாய்ப்பால் கொடுத்து வளர்க்க வேண்டுமே யல்லாது நஞ்செனும் பாலைக் கொடுக்கக் கூடாது.இந்த நெறிகளைக் கடைப் பிடிக்கவில்லை யானால் இவர்களைத் தகுந்தவாறு நெறிப் படுத்த யார் உளர்!

இப்பாட்டு நாடாளும் வேந்தனை முன் வைத்து அவரவர்களின் கடமையையும் அவர்களை

எத்தன்மையிலும் மாறுபட்டு நடவாமை வேண்டும் என்பதையும் ஓதுதலாயிற்று.

ஆலம் – நஞ்சு.

**94. அந்தணர்கள் செய்யும் வேள்வயின் சிறப்பால் யாவும் மேன்மையுறும் என்பதும் வேள்வியின் சிறப்புக் குறையுமானால் யாவும் அழிவுறும் என்பதும் உரைத்தல்:**

பாடற்குறிப்பு: அந்தணர்கள் வேதம் ஓதி வேள்வியைப் புரிகின்றனர். அதனால் தேவர்கள் அவிர் பாகத்தைப் பெறுகின்றனர். அவர்களும் இம்மண்ணுலகம் இனிது விளங்குமாறு மழை பொழிவித்தல் முதலான பல நலன்களைச் செய்கின்றனர். பிணிகள் நீங்குகின்றன. நச்சுக்காற்று அழிந்து ஆரோக்கியமான நிலை ஏற்படுகின்றது. மருட்சியும் மயக்கமும் நீங்கி தெளிவு உண்டாகின்றது. தெய்வநலமும் அருள் நலமும் நன்கு மலர்வதற்குக் காரணமாக இருக்கின்றது. இதனையொட்டியே வேள்விகள், உலகில் நன்மையை விளங்கச் செய்கின்றன எனப் போற்றப்படுகின்றன. அத்தகைய சிறப்பான வேள்விகளை வகுக்கும் வேதங்களைப் போற்றுதலும் அதில் விற்பன்னர்களாக விளங்கிப் புரியும் அந்தணர்களை ஏத்துதலும் நடை பெறுகின்றன.

இதன் சிறப்பினைத் திருஞானசம்பந்தர்,

> "கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே
> செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பல மேய
> முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
> பற்றா நின்றாரைப் பற்றா பாவமே."

என அருளிச் செய்தலையும் காணலாம். இத் தேவாரத் திருப்பாட்டில் வேதங்களை நன்கு கற்றுணர்ந்து அதன் வழி நின்று வேள்விகளைப் புரிந்து, துன்பத்தைக் காணாதபடி நன்கு பாதுகாக்கும் அந்தணர்களை, "கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராது செற்றார்" எனவும் அத்தகைய பெருமக்கள் வாழும் இடம் தில்லை எனவும் உணர்த்துதலைக் காணலாம். இதனை மேலும் வாழ்த்தும் தன்மையில் இத்தகைய வேள்விகளுக்கு உறுதுணையாக விளங்குவன பால் தயிர் நெய் முதலான பஞ்ச கவ்வியம் என்பதைக் காட்டும் தன்மையில் பசுக்களையும் வாழ்க என வாழ்த்தப் பெறுதலாயிற்று. இதனை,

> "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
> வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
> ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
> சூழ்க வையகமும் துயர் தீர்கவே."

என உரைத்தலும் காண்க.

இத்தகைய வேள்ளி செய்யப்படவில்லையானால் இந்திரனின் அருட் சிறப்பு குறையும்; அரசனின் நல்லாட்சி முறை மாறும்; மந்திரங்களின் பிரயோக மகிமையின் சக்தி குறையும்; வறுமையும் தீமையும் உண்டாகும். சந்திர சூரியர்களின் இயல்பு நிலை திரிந்து கெடுதி உண்டாகும். இப்பூமியில் யாவும் நலிவுற்று அழியும். உலகில் நலமுடன் வாழ்பவர் தாம் யாவர்?

இக்கருத்தினில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### ஆறு சீர் ஆசிரிய விருத்தம்

இந்திரன் பதங்கள் குன்றும்
இறையவர் பதங்கள் மாறும்
மந்திர நிலைகள் பேரும்
மறுகயல் வறுமை யாகும்
சந்திரன் கதிரோன் சாயும்
தரணியிற் றேவு மாளும்
அந்தணர் கருமம் குன்றில்
யாவரே வாழ்வர் மண்ணில்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை பாடற்குறிப்பில் உள்ள வாறும் காண்க.

பதம் – அருள் தன்மையும் சிறப்பும், பேர்தல் – திரிதல், கருமம் – வேள்வி புரிதல்.

## XIV. சினம்

### 95. சினத்தால் யாவும் அழிதலை உரைத்தல்:

பாடற்குறிப்பு: உலகத்தில் இனிது வாழ்வதற்குக் கல்வியறிவும் செல்வச் செழிப்பும் இருத்தல் வேண்டும். அதற்கு உறு துணையாக நற்பண்புகள் அமைந்திருத்தல் வேண்டும். அத்தகைய நற்பண்புகள் குறையுமானால் அவ்வவர்களுடைய பெருமையும் தகுதியும் குறைவு படும். பழியும் பாவமும் ஏற்பட்டுப் பிறரால் ஏளனத்துக்கும் ஆளாவர். ஆனால் ஒருவன் சினம் கொண்டு செயற்படுவானேயானால் அவன் முற்றிலும் அழிவான். அவனால் நடுநிலையிலிருந்து சிந்தித்துச் செயலாற்றவும் இயலாது. அவனுடைய கைப் பொருளும் மாயும். ஒருவன் தன்னைக் காப்பாற்றிக்

*கொள்ள வேண்டுமானால், அவன் சினம் கொள்ளக் கூடாது. இதனைத் திருவள்ளுவர்,*

**"தன்னைத்தான் காக்கின் சினங் காக்க
காவாக்கால் தன்னையே கொல்லும் சினம்."**
**(குறள்–305)**

*எனவும்,*

**"சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று." (குறள்–307)**

*எனவும்,*

**"செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற." (குறள்–302)**

*எனவும் உரைத்தபடி சினம் யாவற்றுக்கும் முன்னால் சென்று ஒருவனை அழிப்பதற்குக் காரணமாகின்றது. இவ்வகையில் எண்ணிய புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

**எண் சீர் ஆசிரிய விருத்தம்**

**கெற்பத்தால் மங்கையருக் கழகு குன்றும்
கேள்வி யில்லா அரசனால் உலகம் பாழாம்
துற்புத்தி மந்திரியால் உலகுக்(கு) ஈனம்
சொற்கேளாப் பிள்ளைகளால் குலத்துக்(கு) ஈனம்
நற்புத்தி கற்பித்தால் அற்பர் கேளார்
நன்மை செய்யத் தீமையுடன் நயந்து செய்வார்
அற்பரோடு இனங்கிடிற் பெருமை தாழும்
அரிய தவம் கோபத்தால் அழிந்து போமே.**

**தெளிவுரை:** *மங்கையர் தாய்மை கொண்டு விளங்குகையில் உடல் தளர்ச்சியுறும். அதனால்*

தேகத்தின் கட்டமைப்பு குறைந்து அழகு குறையும். சான்றோர்களின் சொற்களைக் கேட்டு நடத்தல் அரசனின் கடமை. இத்தகைய கேள்வி ஞானம் இல்லாத அரசனின் நாடு வளமையும் நன்னெறியும் இன்றிப் பாழாகும். அத்தகைய அரசன் துர்க்குணம் உடையவனை மந்திரியாகக் கொண்டிருந்தால் நாடு பெருமையின்றிச் சிறுமையடையும். நாட்டுமக்களும் கீழ்மைக் குணங்களால் இழிவுப்படுவார்கள். சிறுவர்கள் பெற்றோர்கள் சொற்களைக் கேட்டு அதன் வழி நடக்க வேண்டும். குருவின் சொற்களைக் கேட்டுத் தெளிவு பெற வேண்டும் சான்றோர்களின் அறிவுரைகளை உணர்ந்து ஒழுக வேண்டும். அவ்வாறு இல்லையெனில் அவர்கள் பிறந்த குலத்திற்கே யன்றி மக்கட் குலத்திற்கும் இழிவாகும்.

அற்ப புத்தியுடையவர்களுக்கு நற் கருத்துக்களை எடுத்துச் சொன்னாலும் பயனில்லை. அவர்களுக்கு நன்மையாகும் என எண்ணிச் செய்யும் செயல் யாவும் துன்மாந்தர் தீமையைச் செய்யவே அமைந்துவிடும். அவர்களுடன் நட்புக் கொள்ளுதலும் இணங்கி யிருத்தலும் ஒருவருடைய பெருமையைக் கெடுக்கும்.

அரிய தவத்தையுடையவர்கள் கோபங் கொள்ளலாகாது. அவர்களுடைய சினம் தவத்தை அழித்துவிடும்.

துருவாச முனிவர், விசுவாமித்திரமுனிவர் ஆகியோருடைய தவ வலிமை அவ்வவர்களுடைய கோபத்தால் அழிந்ததைப் புராண வரலாற்றால் அறியலாம்.

"சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம் என்னும் ஏமப் புணையைச் சுடும்'' என்னும் திருக்குறள் *(எண்:306)* கருத்தினையும் இவண் கொள்க.

## XV. வினை வலிமை

### 96. செல்வ வளத்தைக் கொண்டும் வல் வினையைப் போக்கிக் கொள்ள முடியாது:

**பாடற்குறிப்பு:** ஒருவனுக்குத் திரண்ட செல்வம் சேர்ந்து விட்டது. அவன், தன்னினும் செல்வம் படைத்தவர் யாரும் இல்லை எனக் கருதினான். தெய்வசிந்தனை யற்றவனாய் உலாவந்தான். அவன் மனம் போனபடி எல்லோரையும் நிந்தனை செய்தான். தன் சுற்றத்தார்களையும் பொருட் படுத்தவில்லை. தாய் தந்தையாரை அவமதித்தான். தன்னுடைய மனைவியையும் பேணாதவனாகிக் காமுகனாக அலைந்தான். எத்தகைய பகைமை உடையவர் களையும் செல்வத்தின் ஆட்சியால் வெற்றியைக் கைக்கொண்டு விளங்கினான். அவனுக்கு வினையின் வலிமை தெரியவில்லை. அனைவரையும் ஆட்டுவிக்கும் செல்வத்தின் பெருக்கால் திரிந்தவன் வலிய வினையை வெல்லும் வழியைத் தெரியாதவனானான். நாளடைவில் உடற்பிணி அவனை வாட்டி வதைக்க நலிவுற்றான். அவனுடைய பிணி எத்தகைய மருந்தினாலும் தீரவில்லை.

எல்லாவற்றையும் வெற்றிகொண்ட அவனைக் கொடிய வினையொன்று இருந்து, அவனை நலியச் செய்ய உள்ளது, என்பதை அறிந்து கொள்ள முடியவில்லை.

இத்தன்மையை எண்ணிப் பார்த்த புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### அறு சீர் ஆசிரிய விருத்தம்

செல்வம்வந் துற்ற போது
தெய்வமும் சிறிதும் பேணார்
சொல்வதை யறிந்து சொல்லார்
சுற்றமும் துணையும் பேணார்
வெல்வதே கருமம் அல்லால்
வெம்பகை வலிதென்(று) எண்ணார்
வல்வினை விளையும் பாரார்
மண்ணின் மேல் வாழும் மாந்தர்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

வல்வினை = வலிமையான வினை, கொடிய வினை. இப்பிறவியில் நுகரும் வினை பிராரத்தவினை எனப்படும். இப்பிறவியில் ஒருவர் செய்யும் புண்ணிய பாவங்கள் ஆகாமிய வினை எனப்பெறும். முன்னர் செய்த வினைகள் இப்பிறவியில் நுகவர்வதற்காக வரையறுக்கப்பட்ட பிராரத்த வினைகள் போக எஞ்சியுள்ள வினைகள் சஞ்சித வினை எனவும் பெறும். ஆகாமிய வினை சஞ்சிதவினைகளோடு இணைந்து 137 மேற்கொண்டு எடுக்கும் பிறவிகளுக்குப் பகிர்ந்தளிக்கப் பெறுவதாகும். இத்தகைய வினைகள் இறையருளா லன்றி வேறு வழிகளில் தீராது என்பது சாத்திரக் குறிப்பு.

## 97. மானிடப் பிறவி எடுத்தவர்கள் புகழுடன் விளங்க வேண்டும் எனல்

பாடற்குறிப்பு: உலகத்தில் மானிடராகப் பிறப்பது அரிது. அவ்வாறு மனிதராகப் பிறந்துவிட்டால் வேத நூல்களை முறையாகக் கற்று அருள் தன்மையும் புகழும் கொண்டு விளங்க வேண்டும்; தெய்வத் திருத்தலங்கள் தோறும் சென்று தெய்வத்தை வழி

படவேண்டும்; நடுநிலை தவறாது நீதி வழங்கித் தருமத்தை நிலை நாட்ட வேண்டும்; நல்லோர்களிடம் நட்புடன் பழகி இனிமையுற வேண்டும். ஒரு மனிதனின் பேரும் புகழும் ஒருகாத தூரமாயினும் பரவுமாறு நற்செய்கைகளைப் புரிய வேண்டும். அத்தகைய புகழை ஒருவன் பெறவில்லையானால் அவனை உலக மக்கள் விலங்குகளுள் கழுதையென்றே கருதுவார்கள். இத்தகைய நிலையை விளக்கிப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் விருத்தம்

பூதலத்தின் மானிடராய்ப் பிறப்பதரி(து)
எனப் புகல்வர் பிறந்தோர் தாமும்
ஆதிமறை நூலின்முறை யருள்கீர்த்தி
யாம் தலங்கள் அன்பாய்ச் சென்று
நீதிவழு வாதவகை வழக்குரைத்து
நல்லோரை நேசங் கொண்டு
காதவழிப் பேர் இல்லார் கழுதையெனப்
பாரிலுள்ளோர் கருது வாரே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

காதம் – 7½ நாழிகை வழி, 10 மைல்.

## XVI. நீதி முறை

### 98. நீதியைத் துறப்பவர்கள் கெட்டு மடிவார்கள்:

பாடற்குறிப்பு: நடுநிலையில் இருந்து நீதி வழங்க வேண்டும். அத்தகைய நீதியை வழங்குவதற்கு மனமும் அறிவும் தெளிவின்றி ஒரு தலைப் பட்சமாக இருந்தும் தனக்கு மிகவும் அன்புடையவர்கள் என்று கருதியும்,

தனக்குப் பகைமையுடையவர் என்று வெறுத்தும் நீதியை வழங்குபவர்கள், மரம் பசுமையாய் இருந்தும் ஒரு காலத்தில் அதன் இலைகள் உதிர்வதைப் போன்று கெட்டழிவார்கள்.

இத்தகைய தன்மையை எண்ணி வினவி வருந்திய தம்பியர்களுக்கு இராமபிரான் அறிவுறுத்திய நிலையில் கற்பனை நயம் விளங்கப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் விருத்தம்

ஆரம் பூண்ட அணிமார்பா
அயோத்திக் கரசே அண்ணாகேள்
ஈரம் மிக்க மரமிருக்க
இலைகள் உதிர்ந்த வாறேது
வாரங் கொண்டு வழக்குரைத்து
மண்மேல் நின்று வலிபேசி
ஓரம் சொன்ன குடியது போல்
உதிர்ந்து கிடக்கும் தம்பியரே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. இத்தன்மையில் பாடல் எண் 57-இல் உரைத்தவாறும் காண்க.

ஈரம் – பசுமை, வாரம் – வரம்பு, ஓரம் – ஒரு தலைப் பட்சமான அன்பு

## XVII. காதற் சுவை

### 99. தலைவன் தலைவியைப் புகழ்தல்

பாடற்குறிப்பு: இலக்கியத்தில் காதலும் வீரமும் இனிது ஏத்தப் பெற்றுள்ளதாகும். தலைவனும் தலைவியும் கருத்தொருமித்து விளங்க வீரம் இனிது விளைந்து

பெருமையை நல்கும் என்பது வெளிப்படை. அகவாழ்வில் தலைவனும் தலைவியும் ஒத்த கருத்துடையவர்களாய் வாழ்ந்தனர் என்பதும் இலக்கியங்கள் காட்டும் உண்மை.

தலைவன் ஒருவன் தலைவியைப் புகழ்ந்து பேசுகிறான். தலைவனும் தலைவியும் அன்பு கொண்டு அளவோடு விளங்கும் போது தலைவியின் வாயிலிருந்து ஊறும் நீர் பாலும் தேனும் கலந்த தன்மையில் உள்ளதாம் என்னும் கருத்தில்,

"பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர். (குறள்-1121)

(வால் எயிறு = ஒளி மிகுந்த பல்)

எனத் திருக்குறள் சாற்றுகின்றது. இந் நிலையில் தலைவன் ஒருவன் தலைவியின் வாயிலிருந்து ஊறிய நீர் கற்கண்டோ, சர்க்கரையோ, தேனோ, கனியோடு கலந்த பாலோ என வியக்கின்றான். இதன் இனிமையை அத்தலைவன் அமிர்தத்திற்கு இணையான இதனை முனிவர்களுக்கும் தேவர்களுக்கும் அளிக்கலாமே! எனக் கூறும் வகையில் புலவர் ஒருவர் கற்பனை நயம் விளங்கப் பாடிய பாடல் இது.

அறு சீர் ஆசிரிய. விருத்தம்

வண்டுமொய்த் தனைய கூந்தல்
மதனபண் டார வல்லி
கெண்டையோ டொத்த கண்ணாள்
கிளிமொழி வாயின் ஊறல்
கண்டுசர்க்க கரையோ தேனோ
கனியொடு கலந்த பாலோ

அண்டர்மா முனிவர்க் கெல்லாம்
அமுதமென் றளிக்க லாமே.

தெளிவுரை: தலைவியின் கூந்தலில் மேவும் இயற்கை மணத்தை நாடி வண்டுகள் மொய்த்துக் கூந்தலின் கருமையை மேலும் விளங்கச் செய்கின்றன. அவளுடைய தோற்றப் பொலிவு மன்மதனுடைய பொருட்களஞ்சியம் போன்று இன்பத்தை அளிப்பதாக உள்ளது. அவளுடைய கண் கெண்டை மீனைப் போன்று அழகுடன் ஒளிர்கின்றது. அவளுடைய பேச்சு கிளியின் சொற்களைப் போன்று இனிமையாக உள்ளது. அவள் வாயில் ஊறும் நீர் கற்கண்டோ சர்க்கரேயோ! தேனோ! கனியோடு கலந்த இனிய வெல்லப்பாகோ! அறியேன். தேவர்களும் முனிவர்களும் தேவாமிர்தத்தை விரும்புவர்களன்றோ! எனவே இதனை அமுதம் எனக் கொண்டு அளிக்கலாம் அல்லவா!

அண்டர் – தேவர்.

## 100. காதலில் தோல்வியடைந்த ஒருவனின் கூற்று:

பாடற்குறிப்பு: ஒரு ஆண் மகன் நங்கை ஒருத்தியைக் காதலித்தான். பல காலம் அவளையே நாடி வந்தான். அவளே தனக்கு யாவுமாக இருப்பதை அறிந்தான். அவளன்றித் தனக்கு வாழ்வு இல்லை என்னும் நிலையிலும் ஆகிவிட்டான். அவள் அவ் ஆடவனைச் சற்றும் கருதாதவளாக இருந்தாள். அது ஒருதலைக் காமமாகி விட்டது. இந்நிலையில் அவன் தெருவில் நின்று தவிப்பவனாக ஆனான். இவனது நிலைமையை எண்ணிப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

எண் சீர் ஆசிரிய விருத்தம்

ஆல கால விடத்தையும் நம்பலாம்
ஆற்றையும் பெரும் காற்றையும் நம்பலாம்
கோல மாமத யானையை நம்பலாம்
கொல்லும் வேங்கை புலியையும் நம்பலாம்
கால னார்விடு தூதரை நம்பலாம்
கள்ளர் வேடர் மறவரை நம்பலாம்
சேல கட்டிய மாதரை நம்பினால்
தெருவில் நின்று தியங்கித் தவிப்பாரே

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை*

*சேலை கட்டிய சேல் அகட்டிய. சேல் என்னும் மீனைப் போன்ற கண்ணால் சாடை காட்டும் பொது மகளிர் எனவும் பெறும்.*

**101. மெய்யன்புடையவள் போல் நடித்த ஒரு பெண்ணின் இயல்பை உரைத்தல்:**

பாடற்குறிப்பு: *பலவாறு திரிந்து செல்லும் மனத்தையுடைய ஒரு நங்கை தன் கணவனைப் பொருட்படுத்துவதில்லை. அவன் வெளியே சென்றால் கதவைப் பூட்டிக் கொண்டு வெளியேறி விடுவாள். தன் தோழிகளின் வீடுகளுக்கெல்லாம் சென்று பொழுதைப் போக்கி விட்டுத் தன் விருப்பப்படி திரும்புவாள். கணவன் வந்தால், அவள் வந்து கதவைத் திறக்கும் வரையில் தெருத் திண்ணையில் காத்துக் கொண்டிருப்பான். இது அவனுக்கு வழக்கமாகி விட்டது. வேளைக்கு ஏற்ற உணவும் அவனுக்குக் கிடைப்பதில்லை. அவனுடைய நண்பர்கள் அவன் மனைவி ஊர் எல்லாம் சுற்றித் திரிதலை எடுத்துச்*

சொன்னாலும் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை.

ஒரு முறை அவள் கணவன் நன்கு கண்டிக்க வேண்டும் என்னும் நோக்கத்துடன் சற்று வன்மையாகத் தட்டிக் கேட்டான். அவள் தேம்பி அழத் தொடங்கி விட்டாள்; தரையில் புரண்டு அழுதாள்; அவன் எச்சில் உணவை உண்டு வாழ்வதாகக் கூறி உயிரைத் துணித்துக் கொள்வதாக முறையிட்டாள். ஆனால் அவள் மொழிந்தவை யனைத்தும் பொய்யே. அவளை நம்பியுள்ள அவள் கணவனையும் உயர்வாகக் கூற முடியுமோ! இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**அறு சீர் ஆசரிய விருத்தம்**

**வெம்புவாள் விழுவாள் பொய்யே**
**மேல்விழுந் தழுவாள் பொய்யே**
**தம்பலம் தின்பாள் பொய்யே**
**சாகின் றேன்என்பாள் பொய்யே**
**அம்பிலும் கொடிய கண்ணாள்**
**ஆயிரம் சிந்தை யாளை**
**நம்பின பேர்கள் எல்லாம்**
**நாயினும் கடையா வாரே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

இத்தகைய நங்கையை மனைவியாகப் பெற்றவன் மேன்மையாய் விளங்குதல் அரிதாயினமையின் நாயினும் கீழ்ப் பட்டவனாவான் எனச் சுட்டப் பெற்றது. மனைவியானவள் “தற்காத்துத்தற் கொண்டான் பேணித் தகைசான்ற சொற் காத்துச்

சோர்விலாள் பெண்" என்று திருவள்ளுவர் (குறள் 56) உரைத்தவாறு விளங்குதல் வேண்டும். என்பதும் குறிப்பு.

தம்பலம் – தாம்பூலம்.

**102. மன்மதன் பூங்கணையால் தாக்கப்பட்ட ஒருவன் காதல் கொண்டு கன்னியொருத்தி யிடம் வேண்டியது:**

பாடற்குறிப்பு: சோதிடக் கலையில் தேர்ச்சியுடைய ஒருவன் வேறொரு சோதிடர் வீட்டுக்குச் சென்றான். அங்கு சோதிடர் இல்லை. அவருடைய மகள் மட்டும் தனியே இருந்தாள். வந்த சோதிடனைக் கண்டு, "ஏதேனும் கேட்க வேண்டுமானால் கேளுங்கள் நானே சொல்கிறேன்" என்றாள். அவ் ஆடவன் அப் பெண்ணைக் கண்டு மயங்கினான். அவனுக்குக் காதல் மேலிட்டது. தன் காதலைப் புலப்படுத்தி அவள் இணக்கத்தை எதிர்பார்த்து இருந்தான்.

இத்தன்மையில் புலவர் ஒருவர் நயம் தோன்றப் பாடிய பாடல் இது.

எண் சீர் ஆசிரய விருத்தம்

ஒரு நான்கும் ஈரரையும் ஒன்றே கேளாய்
உண்மையாய் ஐயரையும் அரையும் கேட்டேன்
இரு நான்கு மூன்றுடனே ஒன்றும் சொல்லாய்
இம்மொழியைக் கேட்டபடி ஈந்தா யாயின்
பெரு நான்கும் அறு நான்கும் பெறுவாய் பெண்ணே
பின்னையோர் மொழி புகல வேண்டாம் இன்றே
சரி நான்கும் பத்தும் ஒரு பதினைந்தாலே
சகிக்கமுடி யாதினிஎன் சகியே மானே.

**தெளிவுரை:** மான் போன்ற விழியுடைய தோழியே! கன்னிப் பெண்ணே! நான் உண்மையாகவே உன் செவ்விதழ்களைக் கேட்டேன். நீ எந்த மறுமொழியும் கூறாது இருக்கின்றாய்! நான் கேட்ட படி கொடுத்தாயானால் நீ வெற்றி பெறுவாய். மறுத்து வேறு விதமான சொற்களைச் சொல்லிவிடாதே. நான் மன்மதனின் பூங்கணையால் தாக்கப் பட்டு வாடுகின்றேன். இத்துன்பத்தை என்னால் இனியும் பொறுத்துக்கொள்ள முடியாது.

**பாடல் விளக்கம்:** இப்பாடலில் வரும் சில சொற்களுக்குப் பாடல் எண் 4-இல் உள்ளவாறு வருவித்துப் பொருள் காணல் வேண்டும்.

ஒரு நான்கும் ஈரரையும் ஒன்று $=4+2\times\frac{1}{2}+1 = 4+1+1=6$ இது கன்னி ராசி. கன்னிப் பெண்ணே என்னும் விளியாயிற்று.

ஐயரையும் அரையும் $=5\times\frac{1}{2}+\frac{1}{2} = 2\frac{1}{2}+\frac{1}{2}=3$ இது கிழமைகளில் மூன்றாவதாகிய செவ்வாய் என்பதை உணர்த்திற்று. இது பவளவாய், இதழ்கள் என்னும் பொருளைத் தந்தது.

இரு நான்கு மூன்று ஒன்று $=8+3+1 =12$. இது நட்சத்திரங்களில் உத்திரம் ஆகும். எனக்குத் தக்க பதில் உத்தரவாதம் தருக என்பதாம்.

நான்கும் அறு நான்கும் $=4+24 =28$. இது தமிழ் வருடங்களில் ஜய என்பதைக் குறிக்கும். காதலில் வெற்றி பெறுவாய் என்னும் பொருளாயிற்று.

நான்கும் பத்தும் ஒரு பதினைந்தும் $=4+10+15 =29$. இது மன்மத என்னும் வருடப்பெயரைக் காட்டியது.

மனமதனின் மலரம்புகளால் துளைக்கப்பட்டுக் காதல் கொண்டேன் என்னும் பொருளைத் தந்தது.

## 103. ஒரு நங்கையின் கரத்தையும் முகத்தையும் வியந்து கூறுதல்:

**பாடற்குறிப்பு:** ஒருவரைப் புகழ்ந்து பேசவேண்டு மானால் மனம் இடந்தராது. அவருடைய நற் குணங்கள் பல நம் கண் முன்னால் தோன்றினாலும் ஒரு சில குறைபாடுகள் இருந்து புகழ்ச் சொற்களைச் சொல்லத் தொடங்கும் போதே இடை நின்று தடுத்து விடும். அன்பின் வயத்தராக விளங்கும் போது இப்புகழ்ச் சொற்கள் மடை திறந்த வெள்ளம் போன்று தடையின்றி வெளிப்படும். ஒரு ஆடவன் தன் கருத்திற்கிசைந்த நங்கையைப் புகழ்ந்து பேச நினைத்தால் எல்லையே இருக்காது. இந்நிலையில் ஒரு தலைவியின் கரத்தையும் முகத்தையும் நோக்கிப் பேசும் சொற்களாக நயம் தோன்ற, புலவர் ஒருவர் கற்பனைக் களஞ்சியமாகப் பாடிய பாடல் இது.

### எழு சீர் ஆசிரிய விருத்தம்

**தேனுகர் வண்டு மதுதனை யுண்டு**
**தியங்கி யோகிடந் ததனைக் கண்டு**
**தானதைச் சம்பு வினின்கனி யென்று**
**தடங்கையில் எடுத்து முன் பார்த்தாள்**
**வானுறு மதியும் வந்ததென் றெண்ணி**
**மலர்க்கரம் குவியுமென் றஞ்சிப்**
**போனது வண்டோ பறந்ததோ பழந்தான்**
**புதுமையோ இதுவெனப் புகன்றாள்.**

**தெளிவுரை:** தேனைக் குடிக்கும் வண்டு ஓரிடத்தில் தேனை அருந்தி இன்பத்தில் திளைத்து மயங்கிக் கிடந்தது. அவ்வண்டைக் கண்ட ஒரு நங்கை, அது நாவற்பழம் எனக் கருதித் தன் கையால் எடுத்தாள். அதனை நன்கு உற்று நோக்கினாள். அவ் வண்டும் அவள் முகத்தைப் பார்த்துப் பேரதிர்ச்சியடைந்து சந்திரன் உதித்துவிட்டதோ என எண்ணியது. அவளுடைய கரத்தையும் தாமரை மலர் எனக் கருதி மாலை நேரமாகி விட்டால் அது குவியத் தொடங்கித் தான் அதனுள்ளே கிடக்க வேண்டியதாகிவிடுமே என எண்ணி அஞ்சிப் பறந்து சென்று விட்டது. இவ்வாறு பறந்து சென்ற வண்டைப் பார்த்து அந்நங்கையும், வண்டுதான் பறந்து சென்றதோ அல்லது நாவல் பழந்தான் புதுமையானதோ என வியந்து சொல்வாளாயினள்.

மது – தேன், சம்பு – நாவற்பழம், மதி – சந்திரன், மலர் – தாமரை மலர்.

## 104. காதற் பாங்குக்குக் கொடுக்கும் விலை.

**பாடற்குறிப்பு:** பொது மகளிரை வரைவில் மகளிர் என்று அழைக்கப்படுதலைத் திருக்குறள் மூலம் அறியலாம். இத்தகைய வகையினர் ஒருகாலத்தில் இருந்தனர். இக்காலத்தில் இவ்வகையினர் இங்கு இல்லை. பொது மகளிரை நாடிப் பொன்னும் பொருளும் வழங்கிப் போகத்தைப் பெறும் ஆடவர்கள் உண்டு. இத்தன்மையில் ஒரு பெண் தனக்கு அன்னையைப் போன்று மூத்து விளங்கும் ஒரு தோழியைக் கண்டு பேசும் உரையாடல் இது. இது புலவர் ஒருவரின் பாடலாக வடிவெடுத்தது.

### அறு சீர் ஆசிரிய விருத்தம்

அன்னையே அனைய தோழி
அறந்தனை வளர்க்கும் மாதே
உன்னை ஓர் உண்மை கேட்பேன்
உரைதெளிந்து உரைத்தல் வேண்டும்
என்னையே புணரு வோர்கள்
எனக்கும் ஓர் இன்பம் நல்கிப்
பொன்னையும் கொடுத்துப் பாதப்
போதினில் வீழ்வ தேனோ.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை பாடற் குறிப்பில் உள்ள வாறும் காண்க.*

பாதப் போது – காமத்தின் மேலீட்டால் காலில் விழுந்து களித்தலை உரைத்தல்.

### 105. தருமம் செய்யாதவர்களுடைய பொருள் சிதறி அழிதலை உரைத்தல்:

பாடற்குறிப்பு: *செல்வத்தின் பயன் பிறர்க்கு உதவி செய்து அறங்களைப் பெருக்குவதால் அச்செல்வம் பெரிது வளரும். பிற்காலத்தில் அறம் செய்யலாம் என்று எண்ணாது இப்போதே அறம் செய்தல் வேண்டும் என்னும் கருத்தும் அன்றறிவாம் என்னாது அறம் செய்க" என்னும் திருக்குறள் வாயிலாக அறிவுறுத்தப்பட்டது. அறத்தின் வழி நிற்போர் சிவிகையில் ஏறும் வளமையுடைமையும் ஆகும். அறநெறியின் வழி நடப்பதே பெருத்த இன்பத்தைத் தரும். அறநெறியிலிருந்து விலகி வாழும் மக்கள் பழியை யடைவார்கள். இவ்வாறு அறங்களைச் செய்யாதவர்களுடைய பொன்னும் பொருளும் சிதறி இன்மையாகிவிடும். தருமம் செய்யாதவர்களுடைய*

திரவியங்கள் பொது மகளிர்க்கே வழங்கப்பட்டுச் சிதறிக் கெடும் என்னும் கருத்து அவர்கள் வாயிலாக வெளிப்படுவதாயிற்று. இதனுடன் கள்ளும் சூதாட்டமும் சேர்ந்தால் மலையளவு செல்வமும் சிதறிக் கெடும். உலகைப் படைத்த நான்முகன் தருமம் செய்யாதவர்களுடைய அழிவுக்கென்றே இவைகளைப் படைத்தனனோ! இதனைக் காட்டும் வகையில் பொதுமக்களின் கூற்றாகப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

**பொம்மெனப் பணைத்து விம்மிப்**
**போர்மதன் மயங்கி வீழும்**
**கொம்மைசேர் முலையி னாளே**
**கூறுவேன் ஒன்று கேண்மோ**
**செம்மையில் அறஞ்செய் யாதார்**
**திரவியம் சிதற வேண்டி**
**நம்மையும் கள்ளும் சூதும்**
**நான்முகன் படைத்த வாறே**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

மன்மதனும் மயங்குமாறு செய்யும் ஆற்றலுடைய மங்கையின் பெருமையைச் சாற்றும் நயத்தையும் நோக்குக.

## 106. அபி நயம் காட்டி வசீகரம் செய்யும் நங்கையை நம்பாதே எனல்:

**பாடற்குறிப்பு:** ஒருவனைத் தீண்டியவுடன் விடத்தை ஏறச் செய்து வதைக்கும் நாகத்தையும் நம்பலாம்; திருவாலங்காட்டுப் பழையனூர் நீலியாக வந்து

வணிகனைக் கொன்ற நீலியையும் நம்பலாம்; மதங்கொண்ட யானையையும் நம்பலாம்; பொறுப்பின்றி விளையாடிச் சிரித்துப் பேசுகின்ற சிறுவர்களையும் நம்பலாம்; பொய்க்கணக்கு எழுதும் கணக்கர்களையும் நம்பலாம்; காக்கை போன்று கூர்மையான பார்வை கொண்டு மேற்பார்வை புரிபவர்களையும் நம்பலாம்; உடம்பை அசைத்தும் ஒப்பனை செய்து கொண்டு சிரித்துப் பேசி அபிநயம் செய்யும் மாதரை நம்பியிருத்தல் கூடாது. இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

எழு சீர் விருத்தம்

படியின் அப்பொழுதே வதைத்திடும் பச்சை
நாகத்தையும் நம்பலாம்
பழிநமக் கெனவழி மறித்திடும் பழையனூர்
நீலியையும் நம்பலாம்
கொடு மதக் குவடென வளர்ந்தி டுகுஞ்ச
ரத்தையும் நம்பலாம்
குலுங்கப் பேசிந கைத்திடும் சிறுகுமார்
தம்மையும் நம்பலாம்
கடையி லக்கமும் எழுதிவிட்ட கணக்கர்
தம்மையும் நம்பலாம்
காக்கை போல் வழி பார்த்திடும் காணி
யாளரையும் நம்பலாம்
நடைகு லுக்கியு முகமி னுக்கியும்
நகைந கைத்திடு மாதரை
நம் பொணாது மெய் நம்பொணாது மெய்
நம் பொணாது மெய் காணுமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை

படியின் – தீண்டினால், குஞ்சரம் – யானை

**107. பெண்டிர் பலர் சேர்ந்தால் பெரிய சண்டையே உண்டாகும் எனல்:**

பாடற்குறிப்பு: வண்டின் குணம் மலரில் உள்ள தேனை உண்ணுதலாகும். தண்டமிழ் வளர்ச்சி கண்டால் புலவர்கள் பலர் கூடித் தமிழ்ச் சங்கம் அமைத்து மகிழ்வார்கள். சிறு மதியாளர்கள் இருக்கும் இடத்தில் கோள் கலகம் உண்டாகும். பெண்கள் பலர் சேர்ந்தால் ஒருவர்க்கொருவர் செய்யும் உரையாடல்கள் வாயிலாகத் தற்பெருமையான பேச்சுக்கள் பெருகி அதனால் பெரிய போரே உண்டாகி விடும். இத்தன்மையில் சிந்தித்த புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

கலி விருத்தம்

வண்டுகள் இருந்திடின் மதுவை யுண்டிடும்
தண்டமிழ் இருந்திடிற் சங்கம் சேர்ந்திடும்
குண்டுணி யிருந்திடிற் கோள்கள் மிஞ்சிடும்
பெண்கள் இருந்திடிற் பெரிய சண்டையே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

சங்கம் – புலவர் அவை, குண்டுணி – பொய்ம்ம யுடைய சொற்கள், சிறு மதியால் விளையும் இழி செயல்.

**108. கற்புடைய மாதரின் பெருமையை உரைத்தல்:**

பாடற்குறிப்பு: இவ்வுலகில் அரியதாக விளங்கும் நிலைகள் இவண் உரைக்கப் பெற்றன. அற்பர்களிடமிருந்து எந்தக் காலத்திலும் ஒரு பொருளைப் பெற முடியாது. பயனற்ற

பொருள்களாயினும் அவர்கள் கைவிட மாட்டார்கள். அவர்கள் இறந்த பின்னரே அவற்றைப் பெற முடியும். அதனைப் போன்றே மலைக் குகையில் வாழும் புலியின் தோலையும் கவரி மானின் மயிர் முடியையும் அவைகள் உயிரோடு இருக்கும் வரையில் பெற முடியாது. ஒரு சிறந்த போர் வீரன் கையில் உள்ள கூர்மையான வேலையும் கைப்பற்ற முடியாது. இதனைப் போன்றே கற்புடைய மாதரை ஒருவன் காமத்தால் அடைய விரும்புவானானால் அது அவனுக்குக் கைகூடாது. இக்கருத்தில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

கற்புடை மாதர் கொங்கை
கவரி மான் மயிரின் கற்றை
வெற்புறு வேங்கை யின்தோல்
வீரன்கை வெய்ய கூர்வேல்
அற்பர்தம் பொருள்கள் தாமும்
அவரவர் இறந்த பின்னே
பற்பலர் கொள்வார் இந்தப்
பாரினில் உண்மை தானே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

**109. ஒரு பெண்ணின் நடையழகை வியந்து கூறுதல்:**

**பாடற்குறிப்பு:** இரு நண்பர்கள் காதற் சுவையின் நயங்களை, அளவளாவிக் கொண்டிருந்தனர். ஒரு பெண் தன் தோழியர்களுடன் அவ்வழியாகச் செல்வதைக் கண்ட ஒருவன், கவிச்சக்கரவர்த்தி கம்ப

சூர்ப்பணகை யானவள் இராமபிரானை அணுகிய போது பாடிய பாடலுக்கு இப்பெண்ணின் நடையழகு சான்று பகருமோ என்றான். இன்னொருவன் கையில் அணிந்துள்ள சதங்கை மணிகளும், காலில் அணிந்துள்ள சிலம்புகளும் ஒலிக்க வரும் இவள் அன்னம் அல்ல என்றான். அன்னப்பறவைகள் அணிகளை அணிந்து மணிகள் ஒலிக்கும் ஓசையெழுப்புமாறு நடப்பதில்லையே! இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**கலி விருத்தம்**

**பொன்னின் மணி கிண்கிணி சிலம்பொலி புலம்ப**
**மின்னுமணி மேகலைகள் மெல்லென ஒலிப்பச்**
**சின்னமலர் கொண்டு சில சேடியர்கள் சூழ**
**அன்னமென அல்லவென ஆம் என உரைத்தார்.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பில் உள்ளவாறும் காண்க.

புலம்ப – வெளிப்படுத்த, மேகலை – மேலாடை, சின்ன மலர் – மலர் அரும்புகள்.

**110. தலைவனைப் பிரிந்த தலைவியின் வருத்தம்:**

பாடற்குறிப்பு: பண்டைத் தமிழர்கள் காதலும் வீரமும் தமது இருகண்களாகக் கொண்டிருந்தனர். போர்க்களத்தில் புறமுதுகு காட்டாத பெரு வீரமும் தனது காதற் கிழத்தியுடன் கருத்தொருமித்து இனிது வாழ்தலும் அவர்கள் இனிது பேணிப் பாதுகாத்து வந்தனர். இத்தன்மையில் ஒரு தலைவி தன் தலைவனை நினைத்து வாடும் நிலையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

சங்கு முழங்கும் தமிழ் நாடன்
தன்னை நினைந்த போதெல்லாம்
பொங்கு கடலும் உறங்காது
பொழுதோர் நாளும் விடியாது
திங்கள் உறங்கும் புள்ளுறங்கும்
தென்றல் உறங்கும் சில காலம்
எங்கும் உறங்கும் இராக்காலம்
என் கண் ணிரண்டும் உறங்காதே.

**தெளிவுரை:** *பொங்கியெழுந்து அலைகளை வாரி இரைத்துக் கரையை மோதுகின்ற கடல் உறங்காது. ஆயினும் சந்திரனும் ஒரு நாள் மறைந்து உறக்கம் கொள்ளும். பறவைகளும் உறங்கும். தென்றல் காற்றும் சிலகாலம் உறங்கும். எங்கெங்கும் வெற்றிச் சங்கு முழங்கும் தமிழ் வீரனாகிய என் தலைவனை நினைத்த போதெல்லாம் என் கண்கள் உறக்கம் கொள்ள வில்லை. நான் என் செய்வேன்! அந்தோ!*

*இது தலைவியின் உண்மைக் காதலை வெளிப்படுத்துவ தாயிற்று.*

சங்கு முழங்கு – வெற்றிச் சங்கு முழங்குதல், திங்கள் உறங்கும் – சந்திரன் தோன்றாத நாளான அமாவாசையைக் குறிப்பால் உணர்த்துதலாம். புள் – பறவைகள்.

**111. சித்திரத்தில் வரைந்த ஓவியம் போன்று அழகிய கண்களை யுடைய மாதரின் மனத்தை அறிதல் இயலாது:**

**பாடற்குறிப்பு:** *இரண்டு நபர்கள் ஒரு பெண்ணின் பால் அன்பு கொண்டு பழகி வந்தனர். இருவரும் அவளிடம்*

தமது கருத்தை வெளியிட்டனர். அவள் எந்தவிதமான பதிலும் உரைக்கவில்லை. அவளுடைய மௌனம் சம்மதத்தைக் காட்டுவதாக இருவரும் கருதினர். பருசுப் பொருள்களையும் ஏராளமாக நல்கினர். யாவற்றையும் பெற்றுக்கொண்ட அவள் அவர்கள் இருவரையும் நோக்கிச் சில கலைகளைக் கற்றுவருமாறு கூறினாள். அவர்கள் ஆறு மாதங்களில் கற்று வருவதாகச் சொல்லிப் புறப்பட்டார்கள். ஒருவன் செல்வது மற்றொருவனுக்குத் தெரியாது. ஒருவன் சங்கீதத்தையும் மற்றொருவன் ஓவியத்தையும் கற்கலானான்.

இவர்கள் நன்கு கற்றுத் தேர்ச்சி பெற மூன்றாண்டுகளுக்கு மேல் ஆயின. அவர்கள் திரும்பிவரும்போது அவளுக்குத் திருமணமாகிக் கையில் ஒரு குழந்தையும் இருந்தது. இக்காட்சியைக் கண்ட அவ்விருவரும் மலைத்து நின்றனர். இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**அறு சீர் ஆசிரிய விருத்தம்**

**அத்தியின் மலரும் வெள்ளை**
**யாக்கை கொள் காக்கை தானும்**
**பித்தர் தம் மனமும் நீரில்**
**பிறந்த மீன் பாதந்தானும்**
**அத்தன் மால் பிரம தேவ**
**னாலள விடப்பட் டாலும்**
**சித்திர விழியார் நெஞ்சம்**
**தெளிந்தவர் இல்லை கண்டீர்.**

**தெளிவுரை:** *அத்தி மரத்தின் பூ, வெள்ளை நிறமுடைய காக்கை, பித்தர்களின் மனம், தண்ணீரில்*

விளங்குகின்ற மீனின் பாதங்கள், பிரமன் திருமால் ஆகியவர்களால் காணப்படாத சிவபெருமானின் திருவடிகள் ஆகியன காண்பதற்கு இயலாதனவாகும். இவைகள் காணப் பெறுவதற்கு வாய்ப்பு உண்டானாலும் ஓவியம் போன்று அழகிய கண்களையுடைய மாதரின் நெஞ்சத்தைக் கண்டு அளப்பதற்கு இயலாது.

ஆக்கை – காக்கையின் உடலைக் குறித்தது.

## 112. நற்குண மில்லாத நங்கையை நாடக் கூடாது!

பாடற்குறிப்பு: அறிவில்லாத வண்டு ஒன்று ஓவியத்தில் வரையப்பட்ட ஒரு மலரின் மீது அமர்ந்து தேனினை அருந்த எண்ணியது. அது அமர்ந்ததும் அவ்வோவியத்தில் இருந்த பசையால் பிடிப்புண்டு ஆகாரம் இன்றி வருந்தியது. அதைப் போன்று மங்கையொருத்தி அழகுடன் விளங்குவதை எண்ணி அவளைத் திருமணம் செய்து கொள்ளக் கருதுதல் கூடாது. அருங்கலை ஞானங்கள் வாய்க்கப் பெற்று நல்ல கல்வியைக் கொண்டுள்ளவளாகவும் பெண்களுக்குரிய அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு ஆகிய நாற்குணங்களும் அமையப் பெற்றவளாகவும் இருக்கும் நங்கையையன்றி நாடுதல் துன்பத்தை விளைவிக்கும். இக் கருத்தை ஓதும் வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### அறு சீர் ஆசிரிய விருத்தம்

கொண்டநற் கலைக ளோடு
குணமிலாக் கோதை மாரைக்
கண்டுவின் டிருப்ப தல்லால்
கனவிலும் புல்ல வொண்ணா

துண்டென மதுவை யுண்ண
ஒவியப் பூவில் வீழ்ந்த
வண்டினம் பட்ட பாடு
மனிதரும் படுவர் தாமே.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

## 113. தாம்பத்ய போகத்தை விளம்புதல்:

பாடற்குறிப்பு: ஒரு தலைவி தாம்பூலம் தரித்தவளாகி, வாய் சிவந்திருக்கத் தன் தலைவனோடு பஞ்சணையின் மீது மகிழ்ந்திருந்தாள். ஒரு நேரத்தில் அவளுடைய பருத்துத்திரண்ட மார்பகமானது குறைந்தது போன்ற உணர்வு கொண்டவளாகித் தன் தலைவன் மார்பில் அவை தைத்து ஊடுருவிச் சென்றனவோ என எண்ணி அவன் முதுகுப் புறத்தைத் தடவிப் பார்த்தாள்.

இக் கருத்தினைக் கூறும் வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறு சீர் ஆசிரிய விருத்தம்

துப்புறச் சிவந்த வாயாள்
தூயபஞ் சணையின் மீதில்
ஒப்புறக் கணவ னோ டே
ஓர் லீலை செய்யும் போது
கற்பகஞ் சேர்ந்த மார்பிற்
கனதனம் இரண்டும் தைத்தே
அப்புறம் உருவிற் றென்றே
அங்கையால் தடவிப் பார்த்தாள்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

## 114. தலைவியின் அங்கங்களைப் புகழ்ந்து தலைவன் ஏங்குதல்:

பாடற்குறிப்பு: *நங்கையொருத்தியைக் கண்ட ஆடவன் அவள் பால் மயங்கினான்; காதல் கொண்டான். அவளும் அவனைக் கண்டு பேசினாள். அவளுடைய நடையழகு அன்னப் பறவையின் நடையையும் பழிப்பது போன்றிருந்தது. அவளுடைய விழி கொடிய நஞ்சினும் மிகுந்து அவனை வருத்துவதாக இருந்தது அவளுடைய சொல் அமுதினை வெல்லும் தன்மையில் இனிமையாக இருந்தது. அவளுடைய திரண்ட மார்பகமும், கரிய கூந்தலும், சிறிய இடையும் அவன் நெஞ்சுள் புகுந்து அம்பெனத் தாக்கின. இந்நங்கையால் அவன் பட்ட மன வேதனையைத் தீர்க்க வேண்டுமானால் தெய்வத்திடம் சென்று முறையிடுதலைத் தவிர வேறு கதி இல்லை. ஆடவன் ஒருவன் இந்நிலையில் வருந்துவதைக் கண்டு புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

சந்தக் கழி நெடிலடி விருத்தம்

அன்னம் பழித்த நடை ஆலம் பழித்த விழி
அமுதம் பழித்த மொழிகள்
பொன்னம் பெருத்த முலை கன்னங் கறுத்த குழல்
சின்னஞ் சிறுத்த இடை யென்
என்னெஞ் சுருக்க வுடல் தன்னெஞ்சு கற்றகலை
என்னென் றுரைப்ப தினி யான்
சின்னஞ் சிறுக்கி யவள் வில்லங்க மிட்டபடி
தெய்வங் களுக்கப யமே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற்குறிப்பில் உள்ள வாறும் காண்க.*

அன்னம் – அன்னப் பறவை, ஆலம் – நஞ்சு, குழல் – கூந்தல், சின்னஞ் சிறுக்கி – இளமை கொழிக்கும் நங்கை, வில்லங்கம் – துன்பம், காதல் நோய்.

## 115. தன்னை அலங்கரிக்க வந்த தோழியை நோக்கித் தலைவி உரைத்தல்:

**பாடற்குறிப்பு:** *தலைவனும் தலைவியும் இனிது வாழும் காலத்தில் ஒரு தோழி வந்து தலைவிக்கு அலங்காரம் செய்வாள். ஒருநாள் தலைவியை விட்டுப் பிரிந்து சென்றான் தலைவன். இது தோழிக்குத் தெரியாது. அவள் தலைவியிடம் சார்ந்து அலங்காரம் செய்ய முனைந்தாள். அப்போது தலைவி, "தலைவன் இங்கு இல்லாதிருக்க யான் அலங்காரம் செய்து கொள்வது பயனற்றதல்லவா! அதனை அறியாதவளாயினையே!" எனக் கூறுகின்றாள். இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

### கலி விருத்தம்

**உண்ணல் பூச் சூடல்நெஞ்(சு) உவத்தல் ஒப்பப்**
**பண்ணல்எல் லாம்ஆவர் பார்க்க வேயன்றோ**
**அண்ணல் தன் பிரிவினை அறிந்தும் தோழி நீ**
**மண்ணவந் தனையிது மடமை யாகுமால்.**

**தெளிவுரை:** *என் உயிர்த் தோழியே! நான் உணவு கொண்டு மகிழ்வதும் பூக்களைச் சூடுதலும் மனத்தில் மகிழ்ச்சி கொண்டு இருப்பதும் என்னுடைய நாயகனாகிய கணவனை மகிழ்விப்பதற்கே அல்லவா! என் தலைவன் இப்போது பிரிந்து சென்றுள்ளதை அறிந்தும் என்னை அலங்காரம் செய்வதற்கு வந்தனையே! இது மடமை யாகும் அல்லவா!*

கணவனின் மகிழ்ச்சிக்காகத் தன்னை அலங்கரித்துக் கொள்ளும் மனைவியின் மாண்பும் அவன் அகன்ற விடத்து அதனைக் கொள்ளாத நிலையும் இவண் உரைக்கப்பெற்றது.

## 116. கற்புநெறி நீங்கிய ஒரு பெண்ணின் செயலை உரைத்தல்.

**பாடற்குறிப்பு:** ஒருவன் தன் மனைவிக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்ட போது அண்மையில் உள்ள ஊருக்குச் சென்று மருத்துவம் பார்க்க வேண்டிய தாயிற்று. இரண்டு நாள் காட்டு வழியாகப் பயணம் செய்து அந்தக் கிராமத்தை அடைய முடியும். எனவே உடல் நலம் கெட்டிருந்த தன் மனைவியைத் தோளில் சுமந்தும் வழியில் தகுந்த உணவை ஊட்டியும் அன்புடன் அழைத்துக்கொண்டு சென்று மருத்துவம் பார்த்துக் குணப்படுத்தினான். அவள் தன் கணவன் மீது அன்பில்லாதவளாய் இருந்தாள். தனக்குச் சற்றும் பொருத்தம் இல்லாதவனும் அழகற்றவனும் ஆன முடவன் ஒருவனுடன் பழகி அன்பு செலுத்தி வந்தாள். ஒருநாள் முடவனைச் சார்தற்கு வெளியே செல்லுகையில் எதிர் வந்த கணவனை வஞ்சகமாக ஒரு கிணற்றில் தள்ளி விட்டு ஏகினாள். இத்தகைய குணப்பாங்குடைய ஒரு பெண்ணைக் கண்ட புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**கோளரி யடர்ந்த காட்டிற்**
**குறங்கில் வைத்து அமுதம் ஊட்டித்**
**தோளினில் தூக்கி வைத்துச்**
**சுமந்துபே றாவ ளர்த்த**

ஆளனைக் கிணத்தில் தள்ளி
அழகிலா முடவற் சேர்ந்தாள்
காள நேர் கண்ணி னாரைக்
கனவிலும் நம்பொ ணாதே.

குறிப்பு: *இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பும் காண்க.*

கோளரி – சிங்கம். குறங்கு – துடை. ஆளன் – கணவன், காளம் – நஞ்சு

## 117.

பாடற்குறிப்பு: *முன்பாட்டில் உள்ளவாறு காண்க.*

*முற்பாட்டில் கூறியவாறு ஒருபெண் தன் கணவனைக் கிணற்றில் தள்ளிய நிலையை எண்ணி இத்தகைய பெண், ஒருவனுக்கு மனைவியாகக் கூடாது என்னும் கருத்தில் பாடிய புலவர் ஒருவரின் பாடல் இது.*

### கொச்சகக் கலிப்பா

சேய் கொண்டா ருங்கமலச் செம்மலுடனேயரவப்
பாய் கொண்டாரும் பணியும் பட்டீச் சுரத்தானே
நோய் கொண்டாலும் கொளலாம் நூறு வயதாமளவும்
பேய் கொண்டாலும் கொளலாம் பெண்கொளலாகாதே.

தெளிவுரை: *சிவந்த நிறங்கொண்டு விளங்குகின்ற தாமரை மலரின் மீது மேவும் நான்முகனும், பாம்பணையில் பள்ளி கொண்டு மேவும் திருமாலும், பணிந்து ஏத்தப் பட்டீச்சரத்தில் விளங்குகின்ற சிவபெருமானே! உடற்பிணி கொண்டும், நூறு வயதளவும் பேயால் பீடிக்கப் பெற்றும் வாழ்ந்தாலும்*

இத்தன்மையில் நச்சுத்தன்மையுடைய பெண்ணை மனைவியாகக் கொண்டு வாழலாகாது.

சேய்கொண்டாருங்கமலம் – செந்தாமரை மலர். அரவப்பாய் – பாம்பணை. ஆதி சேடன் பட்டீச்சுரம் – பழையாறை என்னும் ஊரில் உள்ள சிவாலயம். காவிரித் தென்கரைத்தலம். காமதேனுவின் கல்வி "பட்டி" பூசித்தது. அம்பிகை தவம் செய்த தலம். மார்க்கண்டேயர் பூசித்தது. விசுவாமித்திரர் பிரம்மரிஷி என்னும் சிறப்பினைப் பெற்ற இடம். ஞான சம்பந்தருக்கு இறைவன் முத்துப்பந்தர் அருளிய தலம்.

சுவாமியின் பெயர் – தேனுபுரீஸ்வரர், பட்டீச்சுரர் அம்பிகை – ஞானாம்பிகை. பல்வளை நாயகி இங்குள்ள துர்க்கைக் கோயில் தனிச் சிறப்புடையது. திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.

## 118. விழி நயம் உரைத்தல்

பாடற்குறிப்பு: ஒரு நங்கை, பொய்கைக்குச் சென்று தன் இரு கைகளாலும் நீரை எடுத்து முகத்தின் அருகே கொண்டு சென்றாள். கையில் இருந்த தண்ணீரில் அவள் கண்கள் இரண்டும் கெண்டை மீன்களைப் போன்று நிழல்கள் தோன்றின. கெண்டை மீனைப் பிடித்து விட்டதாகக் கருதிக் கரையேறிப் பார்க்கையில் அக்கெண்டை மீன்களைக் கண்டிலள். அவள் அங்கேயே அயர்ந்து நின்று விட்டாள். இத்தன்மையை விளம்பும் வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

கலி விருத்தம்

தண்டு லாவிய தாமரைப் பொய்கையில்
மொண்டு நீரை முகத்தரு கேந்தினாள்
கெண்டை கெண்டையென் றக்கரை யேறினாள்
கெண்டை காண்கிலள் நின்று தயங்கினாள்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.

பொய்கை – குளம். கெண்டை – மீன்வகை.

## 119. தலைவியின் மேனியழகை விளம்புதல்

பாடற்குறிப்பு: ஒரு பொய்கையில் நீராடிக் கொண்டிருந்த நங்கை யொருத்தியைக் கண்டு ஆங்குக் கூடியிருந்த மயிலினங்கள் இவளுடைய சாயலுக்கு அஞ்சி நாணம் கொண்டு ஒரு சோலைக்குள் புகுந்து மறைந்து கொண்டன. அருகில் இருந்த யானைகள் அப்பெண்மணியின் தனங்களைக் கண்டு தம்மினம் என நெருங்கி வரும்போது அவளுடைய சிறுத்த இடையைக் கண்டதும் இது சிங்கமோ என அஞ்சி ஓடின.

இத்தன்மையில் புலவர் ஒருவர் இந்நங்கையின் அவயவங்களை வியந்து பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

நிலத்தினில் சுழியின் மூழ்கி
நின்றவள் தன்னை நேரே
குலத்தலை மஞ்ஞை கண்டு
கூவெனக் கானில் ஏக
முலைத்தலை யதனைக் கண்டு
மும்மதக் கரிவந் துற்ற
தலைத்தலைச் சிங்கம் என்(று)அக்
களிறுகண்(டு) ஏகிற் றம்மா.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

சுழி – பொய்கை. மஞ்ஞை – மயில், கரி – யானை.

## 120. தலைவியின் நலன்களைப் புனைந்துரைத்தல்

**பாடற்குறிப்பு:** *ஒரு பொருளை விளக்கும் போது கற்பனை வளம் பெருக உரைப்பது கவிமரபு. சிவ பெருமானுடைய சடை முடியில் விளங்கும் நாகத்தைக் கண்டு தேவி அஞ்சுகிறாள். அந்த நாகமே தேவியைக் கண்டு மயில் என நோக்கி, அஞ்சுகின்றது. எனத் திருநாவுக்கரசர் கற்பனை நயம் விளங்க (நான்காம் திருமுறை 53 திருவாரூர் திருப்பதிகம் பாடல் எண்.2) அருளிச் செய்தலையும் காணலாம்.*

*இத்தன்மையில் நங்கை யொருத்தியின் அங்கங்களைக் கற்பனை நயம் விளங்குமாறு புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**உந்தியின் சுழியின் கீழ்ச்சேர்**
**உரோமமாம் கரிய நாகம்**
**சந்திரன் எனவே எண்ணித்**
**தையலாள் முகத்தை நோக்க**
**மந்திர கிரிகள் விம்மி**
**வழிமறித் திடுதல் கண்டு**
**சிந்துரக் கயற்க ணோடிச்**
**செவிதனக் குரைத்த தம்மா.**

**தெளிவுரை:** *நங்கை யொருத்தியின் உந்திக்கு அருகில் உள்ள உரோமமாகிய கரு நாகம், சந்திரன் எனக்கருதி அவள் அழகிய முகத்தை நோக்குகையில் மேருமலை போன்றதாகிய அவளுடைய தனங்கள் நாகத்தின் பார்வையை வழிமறித்து நிறுத்தியது. இத்தன்மையைக்*

கண்ட அவள் கயற்கண் விரைந்து சென்று உரைக்கும் பாங்கில் காதின் பக்கமாக ஓடியது.

**121. மயிலைக் கண்ட நாகம்.**

பாடற்குறிப்பு: முன் பாடலிற் புலப்படுத்திய பாங்கில் இப்பாடலும் அமைந்ததாம். ஒரு மங்கையின் முகத்தைக் கண்டு நிலவென்று கருதிய நாகம் அவள் பயின்ற நடையைக் கண்டு மயிலோ என அஞ்சி ஓடியது. இவ்வாறு புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

**மாகமா மேடை மீதில்**
**மங்கைநின் றுலாவக் கண்டு**
**ஏகமா மதியென் றெண்ணி**
**இராகுவந் துற்ற போது**
**பாகுசேர் மொழியி னாளும்**
**பற்றியே பாதம் வாங்கத்**
**தோகைமா மயிலென் றெண்ணித்**
**தொடர்ந்தரா மீண்ட தன்றே.**

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

இராகு – பாம்பு. பாதம் வாங்க – நடந்து செல்ல. அரா – நாகம்.

**122. தலைவியை வருடிய தலைவனின் செயலை விளம்புதல்.**

பாடற்குறிப்பு: மங்கையரின் உடல் உறுப்புக்களை உலகில் உள்ள அரிய பொருள்களுக்கு உருவகப் படுத்தி மொழிதல் கவி மரபு. இவ்வகையில் கூந்தலைக் கார் மேகத்திற்கும், புருவங்களை வில்லுக்கும் மார்பகங் களை மேரு மலைக்கும் ஒப்பிடுவது உண்டு.

அல்குலைப் பாம்பின் படத்திற்கு உவமை கூறுதலும் இவ்வகையைச் சார்ந்ததாகும். இத்தன்மையில் ஒரு தலைவன் தலைவியின் அல்குலை வருடியதாகப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

காரெனும் குழல்க டப்பிக்
கடுஞ்சிலை வாளி தப்பி
மோரென வளர்ந்து நின்ற
வேழத்தின் கோடு தப்பித்
தாருறு கரிய ரோமச்
சங்கிலி வழியே சென்று
சீரிய னெனவ ளர்ந்த
செல்வனல் குலிற்கை வைத்தான்.

**தெளிவுரை:** மங்கை ஒருத்தியின் கூநதல் கார் மேகம் போன்று கருமையாகவும் அடர்த்தியாகவும் திரண்டிருந்தது. அவள் புருவம் கொடிய வில்லைப் போல் விளங்கியது. அவள் வீசிய பார்வையாகிய அம்பில் தாக்குண்டும் சோர்வடையாதவனாய், மேரு மலை போன்று ஓங்கி வளர்ந்த யானைத் தந்தங்களை யொத்த தனங்களையும் அடர்ந்து மாலையைப் போன்று விளங்கிய கருங்கூந்தல் சங்கிலி போன்று பின்னால் திகழ்ந்து விளங்க, அதன் வழியாகத் தன் கையைக் கொண்டு சென்ற தலைவன், அல்குலிற் பதித்தான்.

கார் – மேகம். குழல் – கூந்தல். மேரு – மார்பகத்தை உணர்த்திற்று. தாருறு கரிய ரோமச் சங்கிலி – சங்கிலி மாலை போன்று பின்னிய கூந்தல். செல்வன் – தலைவன். செல்வியையுடையவன்.

## 123. வாலிபர்கள் மயங்கும் தன்மை

**பாடற்குறிப்பு:** ஆடவர்கள் பெண்ணின்பத்தைப் பெரிதும் விழைதல் உலக இயற்கை. இதனையே வாழ்க்கையில் அடையக் கூடிய கதியெனவும் சிலர் எண்ணுகின்றனர். இது சிறுமையுடையது என்பதனை உணர்த்தும் வாயிலாகப் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

அறுசீர் ஆசிரிய விருத்தம்

**உண்டதை யொழிக்கும் வாசல்**
**உவரிநீர் ஒழித்து மேலே**
**வண்டலும் அழுக்கும் சேறும்**
**உதிரமும் மாறா வாசல்**
**உண்டதன் இருப்பைக் கண்டு**
**பெருங்களி யுள்ளங் கொண்டு**
**கண்டனர் இளைஞர் எல்லாம்**
**கதியெனக் கருது வாரே.**

**தெளிவுரை:** இவ்வுடம்பு அழியக் கூடிய ஒன்று. நாம் உண்கின்ற உணவும் அப்படியே இருப்பதில்லை. வயிற்றுக்குள் சென்று உவர் நீராக வெளிப்படுகிறது. மற்றும் வண்டலும் சேறும் அழுக்குமாகவும் மலமாகவும் வெளியேற்றி விடுகிறது. அதற்கு அண்மையில் உதிரம் பெருக்கி வெளியேற்றுகின்ற வாசலை எண்ணி இளைஞர்கள் பேருவகை யடைகின்றனர். சிலர் அதுவே கதியாகவும் கிடந்து இழிவடைகின்றனர்.

இவ்வாறு பெண்ணின்பத்தில் மூழ்கிக் கிடப்பது சிறுமையுடையதாகும் என்னும் குறிப்புத் தோன்ற 'கதியெனக் கருதுவாரே' என உணர்த்தப் பட்டது.

## 124. மங்கையொருத்தியின் கண்ணையும் வாயையும் புகழ்தல்.

பாடற்குறிப்பு: கூர்மையான விழியும் செம்பவளம் போன்ற வாயும் உடைய ஒரு பெண் மூக்கில் குன்றி மணியை அணிந்திருந்தாள். ஆடவன் ஒருவன் அவளைப் பார்த்து, அழகிய ஆபரணங்களை உடம்பில் கொண்டு விளங்கியிருக்க நாசியில் குன்றி மணியை மட்டும் கொண்டிருப்பதேனோ என்றான். இதனைக் கேட்ட அந்நங்கை தன் கரிய விழியையும் செம்பவளம் போன்ற வாயையும் கண்டு இவ்வாறு பேசுகிறான் எனத் தெளிந்து, கண்ணையும் வாயையும் தன் கைகளால் மூடிக் கொண்டு தன் நாசியில் இருப்பது குன்றிமணியல்ல. அது வெண் முத்து எனப் புகன்றாள்.

இக்காட்சியினை விளக்கும் முகத்தான் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

கொல்லுலை வேற்க யற்கண்
கொவ்வையக கனிவாய் மாதே
நல்லணி மெய்யிற் பூண்டு
நாசிகா பரண மீதிற்
சொல்லதில் குன்றி தேடிச்
சூடிய தென்னோ என்றான்
மெல்லியல் கண்ணும் வாயும்
புதைத்தனள் வெண்முத் தென்றாள்.

குறிப்பு: இதன் பொருள் வெளிப்படை.

குன்றி – குன்றிமணி.

## 125. தெருவில் சென்று கொண்டிருந்த ஒரு பெண்ணைக் கண்டு மயங்கி விளம்புதல்

**பாடற்குறிப்பு:** *மங்கையொருத்தி தெரு வழியே சென்று கொண்டிருந்தாள். அவளுடைய கருமையான கூந்தலும் வடிவமைப்புடைய உடல் அழகும், மயில் போன்ற சாயலும், பெருத்த மார்பகங்களும் சிறிய இடையும் கொண்ட வனப்பு நிலை அவனை மயக்கியது. அவள் அருகில் வரவும் அவன் மனமும் உருகிக் கரைந்தது. அவள் சிறிது நேரம் நின்றாள். அவள் நின்ற நிலை தெய்வமே நின்றதுபோல் தோன்றியது. இத் தன்மையைப் புகலும் வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.*

கலி விருத்தம்

**அருகில்இவள் அருகில்இவள் அருகில்வர உருகும்**
**கரியகுழல் மேனியிவள் கானமயில் சாயல்**
**பெரியதனம் இடைசிறிது பேதையிவள் ஐயோ**
**தெருவில்இவள் நின்றநிலை தெய்வம்என லாமே.**

**குறிப்பு:** *இதன் பொருள் வெளிப்படை. பாடற் குறிப்பில் உள்ளவாறும் காண்க.*

பேதை – பெண். ஐயோ – வியப்புச்சொல்.

## 126. மங்கையை வணங்கிய மன்மதன்.

**பாடற்குறிப்பு:** *மங்கையொருத்தி வாள் போன்ற கூரிய விழியுடையவள். அழகிய நெற்றியில் திலகம் வைத்துள்ளவள். கரும்பு வில்லையேந்திய மன்மதன் அவளைக் கண்டான். அப்பெண்ணின் கண்கள் பெரும் கலகத்தைச் செய்யக்கூடியது எனக் கருதினான். அக்கண்களுக்கு முன்னால் தனது மலர் அம்புகளும்*

பயனற்றதாகி விடும் எனக் கொண்டு அவ் அம்புகளை அவள் முன்னே வைத்து வணக்கம் செலுத்தினான்.

இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

### கலி விருத்தம்

**அலகு வாள்விழி ஆயிழை நன்னுதல்**
**திலகம் கண்டெதிர் செஞ்சிலை மாரனும்**
**கலக மேசெயும் கண்ணிது வாம்என**
**மலரம் பைந்தையும் வைத்து வணங்கினான்.**

குறிப்பு: இதன் பொருள் பாடற் குறிப்பில் உள்ளவாறு காண்க.

ஆயிழை – மங்கை. திலகம் – பொட்டு. செஞ்சிலை – மன்மதனின் வில் இதனை மனிதற்குக் கரும்பு வில்லும் அரக்கர்க்கு இரும்பு வில்லும் தேவர்களுக்கு பூ வில்லும் ஆகும் என்பர். மாரன் – மன்மதன். மலரம்பு ஐந்து 1. தாமரை 2. அசோகு. 3. மா. 4. முல்லை. 5. கருங்குவளை.

## 127. மங்கையர் இருவர் தமக்கு இசைந்த நாயகரை உரைத்தல்.

பாடற்குறிப்பு: இளம் வயதுடைய மங்கையரும் காளையரும் கவிநயம் விளங்கப் பேசுதல் இயல்பு. ஆடவர் தமக்கு இசைந்த நங்கையைக் கண்டு மான், மயில், குயில், கிளி என்னும் சொற்களைப் பேசி மகிழ்தலும், மங்கையர் தமக்கு இசைந்த ஆடவரைக் காளை, குதிரை, புலி, சிங்கம் எனக்கூறிப் பூரித்தலும் உண்டு. சிலர் வசைச் சொற்களால் இடித்துக் கூறுதலும் உண்டு. இத்தன்மையில் ஔவையார்,

"எட்டேகால் லட்சணமே எமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே – முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
ஆரையடா சொன்னா யது"

எனப்பாடிய புதுமையையும் காணலாம்.

எட்டு என்னும் இலக்கம் தமிழில் "அ" எனவும் கால் என்னும் (1/4) இலக்கம் தமிழில் "வ" எனவும் பெறும். இவ்வகையில் ஏசும் சொற்களாக அவ லட்சணமே எருமை மாடே (எமனேறும்பரி) குட்டிச்சுவரே (கூரையில்லா வீடு) கழுதையே (பெரியம்மை – மூதேவி) குரங்கே (ராமதூதுவன்) என விளிப்பதாகும்.

இவ்வகையான நயத்துடன் ஒரு நங்கை தன் நாயகன் "எருமைக்கடா" எனவும் மற்றொருத்தி தன் நாயகன், "குரங்கு" எனவும் பொருள் தோன்றக் கூறினாள்.

இத்தன்மையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

கட்டளைக் கலித்துறை

அரவிந்த நண்பன் சுதன்தம்பி
மைத்துனன் அண்ணன்கையில்
வரமுந்தீ யாயுதம் பூண்டவன்
காணுமற் றங்கவனோ
பரமன் திகிரியினை யேந்திய
மைந்தன் பகைவன் வெற்பைப்
உரமன் றெடுத்தவன் மாற்றான்றன்
சேவகன் ஒண்டொடிய.

**தெளிவுரை:** தாமரை மலருக்கு நண்பனாகிய சூரியனின் புதல்வன் கர்ணனின் தம்பியான அர்ச்சுனனின் மைத்துனனான கண்ணபிரானின் அண்ணன் பலராமன் கையில் உள்ள வரபலம் மிக்க ஆயுதமாகிய கலப்பையைத் தன் கழுத்தில் கொண்டுள்ள "எருமைக்கிடா" என ஒருத்தி சொன்னாள்.

பரமேசுவரன் விளங்கும் கயிலை மலையை தூக்கிய இராவணனுடைய பகைவனான இராம பிரானுக்குத் தொண்டு செய்தவனும் மருந்து மலையைப் பெயர்த்துக் கொடுத்துவந்தவனுமாகிய ஆஞ்சநேயன் - குரங்கு என இன்னொருத்தி கூறினாள்.

அரவிந்தம் – தாமரை. அரவிந்த நண்பன் – சூரியன். சுதன் – புதல்வன். கர்ணன் கிரி – கயிலை மலை. உரம் – வலிமை. ஒண் தொடி – பெண்.

## 128. ஆடவர் இருவர் தமக்கு இசைந்த நங்கையரை விளம்புதல்

**பாடற்குறிப்பு:** முற்பாடலில் மங்கையர் இருவர், தமக்கு இசைந்த நாயகர்களின் தன்மைகளை நகைச்சுவை மணக்க உரைத்தலைப் போன்று ஆடவர் இருவர் தமக்கு இசைந்த மங்கையரை வெளிப்படுத்தினர். ஒருவன் தனக்கு வாய்த்தவள் "கழுதை" எனவும், இன்னொருவன் தனக்கு வாய்த்தவள் "நாய்" எனவும் அறிவித்த வகையில் புலவர் ஒருவர் பாடிய பாடல் இது.

**கட்டளைக் கலித்துறை**

**சங்கரன் தேவி தமையன்**
**மனைவி தனக்கு மூத்தாள்**

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

□ □ □

